## நாகரத்திலும் தமிழிலும் மூலமும் பதவுரை, பொழிப்புரைகளும் விளக்க உரையும் குறிப்புகளும் உள்ளன

| | ரூ. | பை |
|---|---|---|
| ஈச-கேன-கட உபநிஷதங்கள் | 3 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| ப்ரச்ன-முண்டக-மாண்டுக்ய-ஐதரேய உபநிஷதங்கள் (பக்கம் 172) | 5 | 00 |
| தைத்திரீய உபநிஷத்து (பக்கம் 91) | 3 | 00 |
| சாந்தோக்ய-ப்ருஹதாரண்யக உபநிஷத்துக்களின் ஸாரம், ப்ரஹ்மஸூத்ரத்துடன் (மூன்றாவது பதிப்பு) பக்கம் 320 | 6 | 00 |
| காலிகோ | 9 | 00 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரீய நாராயணவல்லி) பக்கங்கள் 146 | 5 | 00 |
| ஸ்ரீமத்பகவத்கீதை | 8 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை (பாராயணம்) | 4 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை மூலம் (தமிழ்) பாக்கட் சைஸ் | 2 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) | 2 | 00 |
| ஸ்ரீ ருத்ரம்-சமகம் (மஹாந்யாஸத் துடன்—பக்கம் 296) | 6 | 50 |
| காலிகோ | 10 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம்:— | | |
| தமிழில் ஸ்வரத்துடன் | 6 | 00 |
| நாகரத்தில் ஸ்வரத்துடன் முதல்பாகம் | 2 | 50 |
| ஷை இரண்டாம் பாகம் | 8 | 00 |
| தேவி பாகவதஸாரம் முதல் பாகம் | | |
| சாதா பைண்டு | 15 | 00 |
| காலிகோ பைண்டு | 20 | 00 |
| ஸ்ரீதேவிமாஹாத்மியம் | 9 | 00 |
| ,, அட்டை பைண்டு | 12 | 00 |
| தேவி ஸ்தோத்தரங்கள் | 2 | 50 |
| உபநயனம் | 3 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| குருகீதை | 3 | 25 |
| நாரத பக்தி சூத்திரங்கள் | 1 | 75 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஜபவிதானம் | 4 | 00 |
| ஸந்தியாவந்தனம் (தமிழ்) | 2 | 00 |
| ,, காலிகோ | 4 | 00 |
| ,, ,, (நாகரம்-தமிழ்) | 4 | 00 |
| தேவீஸூக்தங்களும் உபநிஷதங்களும் | 1 | 50 |
| புருஷஸூக்தம் | 2 | 25 |
| பூஜாவிதானம் (தமிழ்) | 8 | 00 |
| ,, (நாகரம்) | 4 | 50 |
| காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீமத் பாகவத ஸாரம்: முதல் பாகம் (ஸ்கந்தம் 1–9) பக்கம் 560 | 10 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் (ஸ்கந்தம் 10–12) பக்கம் 560 | 12 | 50 |
| ஸௌந்தர்யலஹரி பாஷ்யம் | 7 | 50 |
| ஸௌந்தர்யலஹரி (மூலம்)—(நாகரம்-தமிழ்) | 1 | 50 |
| சிவானந்தலஹரி பாஷ்யம் | 4 | 00 |
| ,, (மூலம்) | 1 | 00 |
| சிவ ஸ்தோத்திரங்கள் | 1 | 50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 10 | 00 |
| ,, ,, பாராயணம் | 3 | 00 |
| ,, ,, மூலம் | 2 | 00 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ பாஷ்யம் | 6 | 00 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரம் | 1 | 00 |
| ஸ்ரீவித்யா | 5 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 7 | 00 |
| ,, ,, ஸ்தோத்ரம் (பாராயணத்திற்குரியது) | 3 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| பஜகோவிந்தம் | 1 | 00 |
| அஷ்டோத்தர சத நாமாவளிகள் | 2 | 00 |
| ஆதித்ய ஹ்ருதயம் | (அச்சில்) | |
| சித்தி விநாயக பூஜை | 0 | 50 |
| நவராத்திரி பூஜை | 0 | 50 |

### ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

கடந்த 60 ஆண்டுகளாக தமிழில் வெளிவந்து கொண்டிருக்கும் எங்கள் மாதப்பத்திரிகை. ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் குரலாக விளங்கி மத உண்மைகளை புகட்டுகிறது. உங்கள் உள்ளம் உயர, நீங்கள் ஹிந்து மதத்தை உள்ளபடியே புரிந்து கொள்ள அவசியம் படிக்க வேண்டிய பத்திரிகை இது. ஆயுள் சந்தாவை மொத்த மாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

சந்தா விவரம் : **ஆண்டுச் சந்தா ரூ. 12 ஆயுள் சந்தா ரூ. 150**

**தனிப்பிரதி ரூ. 1-20**

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் : : மயிலாப்பூர், சென்னை-600 004



# திரிபுராவில் நிவாரணப் பணி

நமது நாட்டின் வடகிழக்குப் பகுதியான திரிபுராவில் வருந்தத்தக்க வகையில் மிகவும் பயங்கரமான சூழ்நிலை நிலவி வருகிறது. திரிபுரா பகுதியில் சமீபத்தில் நடைபெற்ற வன்முறையான கலவரங்கள் மனிதகுலத்திற்கே இழைக்கப்பட்ட கொடுமையாகும். நாட்டுப்பற்று கொண்ட பொதுமக்கள் அனைவரும் இத்தகைய சூழ்நிலையில் கலவரப் பகுதிகளில் சமாதானத்தையும் அமைதியான சூழ்நிலையையும் நிலைநிறுத்தச் செயலாற்ற வேண்டும்.

மண்டியா பஜார், மகாராணி, அமர்பூர், ஜம்பூய் ஜலா முதலிய பகுதிகளில் தீயினாலும் வன்முறைக் கலவரங்களினாலும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு சாதி வேறுபாடின்றி போதுமான ஆள் பலமோ, பண பலமோ இல்லாத நிலையிலும் இராமகிருஷ்ண மிஷன் தன்னால் இயன்ற நிவாரணப் பணிகளைச் செய்து வருகிறது.

அங்கு ஆயிரக்கணக்கான மக்கள் வீடுகளை இழந்து அநாதைகளாகத் தவித்து வருகின்றனர். அவர்களுக்கு மறுவாழ்வு அளிக்க உடனடியாக துணி, கம்பளி, போர்வை மற்றும் அன்றாடச் சமையலுக்குத் தேவையான பாத்திரங்கள், மருந்து வகைகள் போன்ற அத்யாவசியமான பொருள்களை வழங்குவதற்கு ஒவ்வொரு குடும்பத்திற்கும் குறைந்த பட்சம் ரூ. 200 தேவைப்படுகிறது. 1,500 குடும்பங்களுக்குத் தேவையான பொருள்களை இராமகிருஷ்ண மிஷன ஏற்கனவே அனுப்பியுள்ளது.

இராமகிருஷ்ண மிஷனின் இந்த நிவாரணப் பணிகளின் வெற்றி, பொதுமக்களாகிய உங்களது தாராள உதவியையும் ஒத்துழைப்பையும் பொருத்துதான் அமையும்.

இந்த நிவாரணப் பணிக்களுக்கான நன்கொடைகள் அனைத்தும் நன்றியுடன் ஏற்கப்படும். ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனுக்கு அளிக்கப்படும் எல்லா நன்கொடைகளுக்கும் வருமான வரிவிலக்குச் சலுகை உண்டு.

பின்வரும் முகவரிகளில் எதற்காயினும் செக் அல்லது டிராப்ட் மூலமாக உதவியை அனுப்பலாம்.

1. **General Secretary, RamaKrishna Mission,**
   **Belur Math, (Howrah) 711202.**
2. **Secretary, Ramakrishna Mission,**
   **Khar, Bombay 400052.**
3. **Secretary, Ramakrishna Misson,**
   **New Delhi, 110055.**
4. **President, Ramakrishna Math,**
   **Mylapore, Madras 600004.**

— சுவாமி வந்தனானந்தர்
பொதுச் செயலாளர்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—60 || ஆகஸ்ட் 1980 || இதழ்—8

## பொருளடக்கம்



**ANNOUNCEMENT**

We are glad to inform the devoted public that Srimat Swami Vireswaranandaji Maharaj, the President of Ramakrishna Math and Ramakrishna Mission, will be camping at the Math between 16th and 23rd September 1980.

| | |
|---|---|
| Wednesday September 3 | Madras - Bangalore by plane |
| Tuesday September 9 | Bangalore - Mysore afternoon |
| Friday September 12 | Mysore - Bangalore afternoon |
| Sunday September 14 | Bangalore - Coimbatore by plane |
| Tuesday September 16 | Coimbatore - Madras by plane |
| Tuesday September 23 | Madras - Colombo by plane |

For further information please contact the office.

SWAMI TAPASYANANDA
PRESIDENT.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

| | | |
|---|---|---|
| தொகுதி 60 | ரௌத்திரி ௵ ஆவணி ௴ | இதழ் 8 |





अनागत-अनन्तकाल-समीक्षयापि अदृष्ट-सन्तारोपायः,
निखिल-जन्तुजात-शरण्य श्रीमन्नारायण तव चरणारविन्दयुगलं
शरणमहं प्रपद्ये ॥

ஸச்சிதானந்தரூபாய விச்வோத்பத்யாதி ஹேதவே|
தாபத்ரய விநாசாய ஸ்ரீ கிருஷ்ணாய நமோ நம:॥

சச்சிதானந்த ரூபமானவரும், உலக சிருஷ்டி முதலியவற்றுக்குக் காரணமானவரும், மூன்று வகைத் துயரங்களையும் அழிப்பவருமான ஸ்ரீ கிருஷ்ணனை மீண்டும் மீண்டும் வணங்குகிறோம்.

சீர்கொண்ட ஆனந்த மாகி எங்கும்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
ஏர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை இடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்தனாதிக்
கடவுளர்வந் தடிபரவும் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவன் அடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம்.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

திங்கட்கிழமை, ஜூன் 4, 1883

ஸ்ரீராமகிருஷ்ணர்: நான் இந்த இளைஞர்களிடம் சாட்சாத் நாராயணனையே பார்க்கிறேன். நரேந்திரனை முதல்முதலில் நான் சந்தித்தபோது, அவனுக்குத் தன் உடலைப் பற்றிய உணர்வே (தேகபுத்தி) இல்லாமல் இருந்ததைப் பார்த்தேன்! என் கையால் அவன் மார்பைக் கொஞ்சம் தொட்டதுமே அவன் புற உணர்வை இழந்து விட்டான். மீண்டும் அவனுக்குச் சுயநினைவு வந்ததும், "ஐயா, என்னை நீங்கள் என்ன செய்து விட்டீர்கள்? எனக்கு அப்பா அம்மா இருக்கிறார்களே!" என்று கூறினான். இதுபோலவேதான் யதுமல்லிக்கின் வீட்டிலும் நிகழ்ந்தது.* அதன் பிறகு நாளடைவில் அவனைப் பார்க்க வேண்டும் என்ற ஏக்கம் என்னுள் சிறிது சிறிதாக வளர்ந்து அதிகமாயிற்று. பிறகு என் உயிரே அவனைப் பார்ப்பதற்குத் துடியாகத் துடித்தது. அந்தச் சமயத்தில் நான் காளி கோவிலில் வேலை செய்து வந்த போலோநாத்† என்பவரிடம், "இதோ பார். என் மனம் ஏன் இப்படித் துடிதுடித்துக் கலங்குகிறது? நரேந்திரன் என்ற காயஸ்த ஜாதியைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் இருக்கிறான். அவனைப் பார்க்க என் மனம் ஏன் இப்படி அலைபாய்ந்து தத்தளிக்கிறது?" என்று வினவினேன். அதற்கு போலோநாத், "தங்கள் மனநிலைக்கு உரிய விளக்கம் மகாபாரதத்தில் இருக்கிறது. சமாதியில் நிலைத்த மகாபுருஷர் ஒருவரின் மனம் அந்தச் சமாதிநிலையிலிருந்து கீழே இறங்கி வரும்போது, சத்துவகுணம் நிறைந்த மக்களுடன் சேர்ந்திருக்க ஆசைப்படுகிறது. சத்துவகுணம் கொண்டவர்களைப் பார்த்தால்தான் அத்தகைய மகாபுருஷரின் மனம் குளிரும்" என்று விளக்கமாகப் பதில் கூறினார். அவர் சொன்னதைக் கேட்டபிறகு தான் என் மனம் அமைதியடைந்தது. நரேந்திரனைப் பார்க்கவேண்டும் என்ற ஏக்கம் காரணமாக நான் அடிக்கடி தனிமையில் உட்கார்ந்து அழுதிருக்கிறேன்.

ஆகா! என் மனம் எத்தகைய தெய்விக நிலைகளிலெல்லாம் இருந்தது! எனக்குக் கடவுள் பித்துப் பிடித்து முதல்முதலாகத் தெய்விக அனுபவம் ஏற்பட்டபோது பகலோ

* ஒரு முறை யதுமல்லிக்கின் வீட்டில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரரைத் தொட்ட போது, நரேந்திரர் புற உலக நினைவிழந்து தெய்விகத்தில் தோய்ந்தார்.

† தட்சிணேசுவரத்துக் காளிகோவிலின் அலுவலகத்தில் போலோநாத் கணக்கு எழுதும் 'கிளார்க்' வேலை செய்து வந்தார்.

> மனிதன் எதை நினைக்கிறானே அதே ஆகிறான். அவனது நினைப்புக்களின் தொகுதியே அவனுடைய ஒழுக்கம்.
> —ஜேம்சு ஆலன்

இரவோ வந்ததும் போனதும் எனக்குத் தெரியவே தெரியாது போயின. எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றே எல்லோரும் அப்போது சொன்னார்கள். என் நிலையைப்பற்றிய உண்மையைப் புரிந்துகொள்ள இயலாத அவர்களால் வேறு என்ன சொல்ல முடியும்? ஆகவேதான் அவர்கள் என்னைத் திருமணம் செய்துகொள்ளும்படி செய்தனர். நான் அப்போது தெய்விகப் பித்துப் பிடித்த நிலையிலே இருந்தேன். அந்த நிலையில் முதலில் நான் என் மனைவியைப் பற்றிக் கவலைப் பட்டேன். பிறகு அவளுங்கூட என்னைப் போலவேதான் வாழப் போகிறாள் என்று நினைத்துக்கொண்டேன்.

நான் என் மாமனார் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவர்கள் அங்கு நல்ல 'கீர்த்தன'த்திற்கு (பக்திபரமான சங்கீதத்தோடு பல முறையும் ஆடலும் சேர்ந்த ஒன்றுக்கு) ஏற்பாடு செய்திருந்தார்கள். மக்கள் அதில் கலந்துகொள்வதற்கு ஏராளமாக வந்திருந்தார்கள். அந்தக் கீர்த்தனம் ஆடல் பாடல், பஜனை, பகவானின் நாமத்தை உரக்கச் சொல்வது ஆகியவற்றுடன் ஒரு பெரிய திருவிழா போலவே ஆகிவிட்டது. அதில் பகவானது நாம சங்கீர்த்தனம் ஒரே கோலாகலமாக மிகுதியாக இருந்தது. நீண்டநேரம் அந்தக் கீர்த்தனம் நடைபெற்றது. சில சமயங்களில், 'நான் இப்படியே இருந்தால் பிற்காலத்தில் என் நிலை என்ன ஆகுமோ!' என்று நினைத்து நான் கவலைப்பட்டேன். ஜகன்மாதாவிடம் நான், ''அம்மா! இந்தக் கிராமப் பகுதிகளில் இருக்கும் ஜமீன்தார்கள், நிலச்சுவான்தாரர்கள், பிரபுக்கள் ஆகியவர்களெல்லாம் எனக்கு மரியாதைக் காட்டுவார்களேயானால், எனது தெய்விக அனுபவங்களை உண்மைதான் என்று கருதுவேன்'' என்று தெரிவித்துக்கொண்டேன். அவர்களும் தாங்களாகவே வலிய என்னிடம் வந்து பேசிவிட்டுச் சென்றார்கள்.

ஆ! நான் அப்போதிருந்த அந்த ஆனந்த பரவச அவஸ்தைகளைப் பற்றி என்னவென்று சொல்வேன்! மிகவும் சிறிய ஒரு தூண்டுதலுங்கூட எனது உள்ளத்தில் ஆன்மிக உணர்வுகளைப் பொங்கி எழச் செய்துவிடும். ஒரு பதினான்கு வயதுப் பெண்ணை அம்பிகையாக வழிபட்டேன். அந்தப் பெண்ணை நான் சாட்சாத் அம்பிகையாகவே பார்த்தேன். வழிபாடு முடிந்ததும் அந்தப் பெண்ணின் திருவடிகளில் பணத்தைக் காணிக்கையாகச் சமர்ப்பித்து அவளை நமஸ்கரித்தேன்.

ஒரு சமயம் ராம்லீலா எனப்படும் தெருக்கூத்து நாடகத்தைப் பார்க்கச் சென்றிருந்தேன். அந்த நாடகத்தில் ராமர், லட்சுமணர், சீதை, ஆஞ்சநேயர், விபீஷணர் ஆகியோரையே கண்டேன். அப்போது அந்த வேடம் தாங்கி நடித்தவர்கள் எல்லாரையும் நான் பூஜித்தேன்.

அந்நாளில் நான் இங்கே சிறிய பெண்களை அழைத்தும் பூஜை* செய்வதுண்டு. அவர்களை சாட்சாத் ஜகன்மாதாவாகவே கண்டேன்.

ஒரு நாள் மகிழமரத்தடியில் ஒரு பெண் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தேன். அவள் நீலநிறப் புடவையைக் கட்டிக்கொண்டு அங்கே நின்றுகொண்டிருந்தாள். அவள் ஒரு விலைமகள் ஆவாள். ஆனால் அவளைப் பார்த்ததுமே, உடனே என் உள்ளத்தில் சீதையைப் பற்றிய நினைவுகளே மேலெழுந்தன. அத்துடன் அந்தப் பெண்ணைப் பற்றி அடியோடு மறந்து விட்டேன். ஆனால் சாட்சாத் சீதையே இலங்கையிலிருந்து மீட்கப்பட்டு ராமரிடம் போய்ச் சேர்வதைக் கண்டேன். நீண்டநேரம் புறவுலக நினைவின்றிச் சமாதி நிலையில் ஆழ்ந்திருந்தேன்.

மற்றொரு நாள் கல்கத்தாவிலுள்ள மைதானத்திற்குச் சற்று உலாவச் சென்றிருந்தேன். அங்கு ஒரு பலூன் (ஆவிக் கூண்டு) மேலே கிளம்பி உயரப் பறக்க இருந்தது. அதைப் பார்ப்பதற்கு மைதானத்தில் ஒரு பெருங்கூட்டம் கூடியிருந்தது. திடீரென்று ஓர் ஆங்கிலேயப் பையனின்மீது என் பார்வை விழுந்தது. அவன் மரத்தின்மீது சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தான். அவன் அங்கு நின்ற நிலையில் அவனது உடல் மூன்று

* குமாரி பூஜை

இடங்களில் (த்ரிபங்கியாக*) வளைந்திருந்தது. அவனை அவ்விதம் பார்த்தேனோ இல்லையோ உடனே ஸ்ரீ கிருஷ்ணரின் நினைவு தோன்றி மின்னினாற்போல் கிருஷ்ண தரிசனம் எனக்கு உண்டாயிற்று. நான் சமாதிநிலை அடைந்து விட்டேன்.

ஒரு முறை சிஹோர் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஆயர் சிறுவர்களுக்கு நான் தின் பண்டங்களைக் கொடுத்துச் சாப்பிடும்படி செய்தேன். அவர்களுடைய கைகளில் தண்ணீர் ஊற்றி அதைக் குடிக்கும்படி செய்தேன். அவர்களை சாட்சாத் பிருந்தாவனத்து ஆயர் சிறுவர்கள் என்றே நான் கருதினேன். அவர்கள் சாப்பிட்டு மீதியிருந்த தின்பண்டங்களில் சிறிதைப் பிரசாதமாக உட்கொண்டேன்; அவர்கள் குடித்து மீதியிருந்த தண்ணீரில் சிறிதளவு நீரை நான் குடித்தேன்.

அக்காலத்தில் எனக்குப் பெரும்பாலும் வெளியுலக நினைவே இல்லாமலிருந்தது. மதுர்பாபு என்னைத் தமது ஜான்பசார் மாளிகைக்கு அழைத்துச் சென்று அங்கேயே சிறிது காலம் வைத்திருந்தார். அங்கே இருந்தபோது என்னை சாட்சாத் ஜகன் மாதாவின் பணிப்பெண்ணாகவே நான் கருதினேன். அந்த வீட்டுப் பெண்கள் என்முன் ஒரு சிறிதும் கூச்சப்படவில்லை. ஒரு சிறுவன் முன்போ சிறுமி முன்போ மாதர் எப்படி இருப்பார்களோ, அது போலவே என் முன்னும் கூச்சமின்றி இருப்பதாக அவர்கள் உணர்ந்தனர். மதுரநாதரின் மகளை அவள் கணவனது அறைக்கு வேலைக்காரியோடு துணையாகச் சென்று விட்டு வருவேன்.

இப்போதுங்கூட மிகவும் அற்பமான பொருளும் என்னிடம் ஈசுவர உணர்வை எழுப்பிவிடுகிறது. ராக்கால் சில சமயங்களில் பகவானது நாமத்தைப் பாதி உரத்த குரலில் ஜபிப்பதுண்டு. அதைக் கண்டு அந்தச் சமயங்களில் என்னை என்னால் கட்டுப்படுத்த இயலாமல் போய்விடும். அது எனது ஞான உணர்வை ஒரேயடியாக எழுப்பிப் பரவசப்படுத்தும்.

* * *

ஜகன்மாதாவின் பணிப்பெண்ணாகத் தம்மைக் கருதிக்கொண்டு அம்பிகையைத் தாம் வழிபட்ட காலத்தில், தமக்கு ஏற்பட்ட தெய்விக அனுபவங்களைப் பற்றி, குருதேவர் பக்தர்களுக்கு விளக்கமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது அவர், “ஒரு சமயம் நான் பாடகர் ஒருவருக்கு ஒரு பாடகியின் அங்க அசைவுகள், நடையுடை பாவனைகளை எல்லாம் நடித்துக் காட்டினேன். நடிப்பு முழுவதும் கச்சிதமாக அப்படியே தத்ருபமாக இருந்ததாக அவர் கூறினர். ‘இதையெல்லாம் நீங்கள் எப்படிக் கற்றுக் கொண்டீர்கள்?’ என்று அந்தப் பாடகர் என்னை ஆச்சரியத்தோடு கேட்டார் என்று சொல்லிக்கொண்டே குருதேவர், குழுமியிருந்த பக்தர்களின் முன்னால் ஒரு பாடகியின் நடையுடை பாவனைகளையெல்லாம் அங்க அசைவுகளுடன் நடித்தும் காட்டினர்.

குருதேவர் அவ்விதம் நடித்துக் காட்டுவதைப் பார்த்த அங்கிருந்த பக்தர்கள் எவராலுமே சிரிப்பை அடக்க முடியவில்லை.

* ஸ்ரீ கிருஷ்ண பகவானது திருவுருவத்திலே அவரது உடல் மூன்று இடங்களில் வளைந்திருப்பதைக் காணலாம்.



உனது ஆன்மிக லட்சியத்திற்கு முரணான, சம்பந்தமற்ற விஷயங்களைத் தெரிந்துகொள்ள ஆசை கொள்ளாதே உணவு, உடல், உறவினர் முதலிய அநாத்ம விஷயங்களைச் சிந்தனை செய்யாதே. எப்போதும் ஆத்மாவையே சிந்தனை செய். அப்பொழுதுதான் இந்தப் பிறவியிலேயே ஆத்மாவை அறியும் வாய்ப்பைப் பெறுவாய்.

—ஒரு துறவி



# ஞானகுரு அவசியமா?

சுவாமி பிரம்மானந்தர்

"மெய்யான குரு ஒருவரை மதிப்பிட்டு அறிந்துகொள்ளும் திறமை என்னிடம் இருக்குமானால், நானே குருவாவேன் அல்லவா?" என்று சிலர் சொல்லலாம். ஆனல் இது பொய்யான விவாதமாகும். உன் வாழ்க்கையில் ஒவ்வோர் அடியை நீ எடுத்து வைக்கும்போதும் நல்லது தீயது இரண்டையும் நீ உண்மையாகவே பிரித்தறிந்துகொள்கிருய் அல்லவா? அவ்விதம் மதிப்பிடும் சக்தி உன்னிடம் இல்லையானல், சிலரை நல்லவர் என்றும் சிலரைக் கெட்டவர் என்றும் நீ ஏன் அழைக்கிருய்? ஒருவனது ஒழுக்கத்தை மதிப்பிடும் திறமை—அதாவது, அவன் காமம் கோபம் முதலியவற்றை வென்றவனு என்பதையும், அவனிடம் மகத்தான அளவில் பக்தியும் ஞானமும் அமைந்து, பண ஆசை நீங்கியுள்ளதா என்பதையும் அறியும் திறமை—உன்னிடம் இல்லையானல், நீ ஒரு தனிமையான இடத்தின் மூலையில் அமர்ந்து கையைக் கூப்பிக்கொண்டு, "பகவானே! நன்மை தீமைகளைப் பிரித்தறியும் சக்தியை எனக்கு அருள்வாயாக" என்று பிரார்த்திப்பதே உனக்கு மேலாகும்.

ஒருவரை முற்றும் சோதித்துப் பார்க்காமல் பூரணமடைந்தவராகக் கருதுவதனல் சிலர் ஏமாற்றமடைகின்றனர். ஒரு மனிதரை உன் குருவாக ஒரு முறை ஏற்றபின், அவருடைய கட்டளைகளை ஒவ்வொரு விதத்திலும் நிறைவேற்றுவதற்கு நீ ஏன் தயங்க வேண்டும்? அவர் என்றேனும் உன்னைத் தீமையை நோக்கிச் செலுத்துவாரா? குலகுருவிடம் மந்திரோபதேசம் பெற்ற பின்பும் யாதொரு பயனும் எள்ளளவும் அடையாதவரும், அதே சமயத்தில் கடவுளை உணரவேண்டும் என்ற ஆவல் உண்மையிலேயே எழப் பெற்றவருமான ஒரு சாதகர்தாம் மெய்யான குருவை ஏற்கும் உரிமையுடையவராவார்.

ஒரு மெய்க்குருவினிடம் உபதேசம் பெற்ற பின்பும், அவர் தமது உடலை விட்டுவிட்ட காரணத்தாலோ, மிகவும் நீண்ட தூரத்திலுள்ள ஓர் இடத்தில் தங்குவதனலோ, அவரோடு சேர்ந்து வாழ்வதற்கு இயலாமற் போகும் காலம் ஒருவருக்கு நேரலாம்; அப்போது அவசியமானல், அவன் தன் குருவினிடமிருந்து ஏற்கனவே கற்றிருக்கும் சாதன முறையைக் கைவிடாமல் வேருெரு பெரியாரிடமிருந்தும் உதவி பெறலாம். இவ்விதம் அவதூதர் என்பவர் இருபத்துநான்கு உப குருக்களை ஏற்றுக்கொண்டதாகப் பாகவதம் சொல்கிறது.

இனி, சாஸ்திரங்கள் இதைப்பற்றி என்ன சொல்கின்றன என்பதைப் பார்க்கலாம். இந்த ஒரு சிறிய கட்டுரையில் சாஸ்திரங்கள் கூறும் கருத்துக்களைக் கொண்டு 'குரு' என்ற விஷயத்தை முற்றும் ஆராய்வது இயலாத காரியம். பிரமாணங்களுக்கெல்லாம் ஊற்ருகவும் தலையாயதாகவும் விளங்கும் வேதத்திலிருந்து ஒரு சில வாக்கியங்களை மட்டும் நான் மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறேன். சுருதிகள் கூறுவதாவது :—

"பரம்பொருளை அறியும்பொருட்டுச் சீடன் கையில் சமித்தை எடுத்துக்கொண்டு, வேதங்களில் நன்கு தேர்ச்சி பெற்றவரும், இறைவனிடம் பரம பக்தி பூண்டவருமான ஒரு குருவிடம் போகவேண்டும்."

"ஆசாரியனை (குருவை) உடையவன் ஞானம் பெறுகிருன்."

"பரம்பொருளைப் போதிப்பவனும் கேட்பவனும் இருவரும் ஆச்சரியமான தகுதியை உடையவராதல் வேண்டும்."

"ஞான ஒளி பெருத குருவினிடம் உபதேசம் பெறுவானுகில், மிருதியாக நெடுங் காலம் தியானம் பண்ணினுலும் ஒருவன் மெய்யுணர்வு பெறமாட்டான்."

"பரம்பொருளிடம் ஆழ்ந்த பக்தியும் தன் குருவினிடம் அதே அளவு பக்தியும் உடையவன் எவனே, அந்த மகானின் உள்ளத்திலே சாஸ்திரங்களில் போதிக்கப்படும் உண்மைகள் தாமாக உதயமாகும்."

இது போன்று, சுருதிகளில் இன்னும் அநேக வாக்கியங்கள் இருக்கின்றன. தந்திர நூல்களிலும் அத்தகைய வாக்குகள் நிறைய உள்ளன. அவற்றில் மெய்யான குருவின் இலக்கணங்களைப் பற்றியும் பொய்யான குருக்களைப் பற்றியும் அழகிய உரையாடல்கள் இருக்கின்றன. அவையனைத்தின் சாரம் முழுவதும் என்னவென்ருல், மெய்யான குருவின் துணையைப் பின்பற்றி ஆத்மசாதனம் பழகுபவர்கள் மட்டுமே மெய்ஞ்ஞானம் பெற முடியும் என்பதே ஆகும்.

ஆனுல் சாஸ்திரங்களில் சில இடங்களில், "உனது குலகுரு யாராக இருப்பினும் அவரிடமிருந்து மந்திர உபதேசம் பெற்றுக் கொள்" என்பது போன்ற வாக்கியங்களும் காணப்படுகின்றன; ஆனுல் பிற்காலத்திலே குருக்கள் கீழ்நிலையை அடைந்து சுயநலம் கொண்டவர்களான பின்பு அவர்களால் புகுத்தப்பட்ட இடைச்செருகல்களே அவை என்பதில் ஐயமில்லை. மதம் என்பது சமுக வாழ்க்கையைப் பற்றியது அல்ல; ஆதலால் சமுகக் கடமையையோ, சமுதாய வழக்கத்தையோ பற்றிய கருத்து சிறிதும் அதனிடம் இல்லை.

என் தந்தையின் குரு—அதாவது பரம்பரைக் குரு. குலக்குரு—சமுதாய வாழ்க்கையில் மதிப்புக்கு உரியவராகலாம்; எனக்குச் சக்தி இருக்குமானுல், நான் அவருக்குப் போதிய பணமும் கொடுக்கலாம்; அவ்வளவு தான். அதற்கு மேல் ஒன்றுமில்லை.

ஆனுல் கடவுளைக் காணவேண்டும் என்று துடிதுடிக்கும் அருள்தாகம் ஒருவனிடம் கொழுந்துவிட்டெரியும்போது, அந்தத் தாகத்தைத் தீர்க்கும் இடத்திற்குச் செல்வதைத் தவிர அவன் வேறு எங்கே செல்ல முடியும்? தனது தாகத்தைத் தணிவிக்கக் கூடிய ஒருவரை விட்டுவிட்டுத் தண்ணீரைத் தேடி வேறு யாரிடம் அவன் செல்வான்? தனது விருப்பப்படி குருவைத் தேர்ந்தெடுத்துக்கொள்வதற்கு உரிய சுதந்திரம் ஒருவனுக்கு இருக்கவேண்டும்.

பெரிய ஞானிகளைக் கேட்கும்போது அவர்கள், "பரம்பொருளை அனுபூதியில் உணர்ந்த ஒரு குருவினிடமிருந்து ஆத்மசாதன முறைகளைக் கேட்டறிந்தும், ஒவ்வோர் அடியெடுத்து முன்வைக்கும்போதெல்லாம் அவரது புத்திமதியைப் பெற்றும், அவர் அனுபூதியில் உணர்ந்துள்ள உண்மைகளின் ஒளியினுல் ஒவ்வொரு படியிலும் ஞான விளக்கம் பெற்றும், நாங்கள் இப்போது இருக்கும் இந்த நிலையை அடைந்திருக்கிருேம். உனக்கும் கடவுளைக் காணும் விருப்பம் உண்மையிலேயே இருக்குமானுல் நீயும் அதே முறையைப் பின்பற்றவேண்டும்" என்று சொல்கிருர்கள்.

கடவுள் இருப்பதாகச் சாஸ்திரங்களில் நாம் படித்திருக்கிருேம்; கடவுள் இருப்பதாக மக்களும் சொல்கிருர்கள்; ஆனுல் உண்மையான குருவோ, "நான் கடவுளைப் பார்த்திருக்கிறேன்" என்று கூறுகிருர். அவர் தமது சீடனுக்குக் கடவுளைக் காணும் வழியையும் காட்டி, அந்த லட்சியத்தை நோக்கி அவனை மெல்ல மெல்ல வழிநடத்தி அழைத்தும் செல்கிருர்.

மெய்யான குருவைக் கண்டதும் அவர்மீது இயல்பாகவே பக்தியுணர்ச்சி பெருகுகிறது. அவரது தோற்றத்தினின்றே, அவர் ஏதோ பரமானந்தத்தைச்சுவைத்துள்ளார் என்பதையும், நாளுக்கு நாள் மேலும் மேலும் அதில் ஆழ்ந்து வருகிருர் என்பதையும் ஒருவர் அறிந்துகொள்ள இயலும். அந்த மகானைக் கண்டதுமே உலகத் துயரங்கள் தொல்லைகள் யாவும் மனதை விட்டு மறைந்து விடுகின்றன; லௌகிக வாழ்க்கையின் அடையாளங்கூட இல்லாமல் மனதைவிட்டு முழு அளவில் நீங்கிவிடுகிறது. அவரது தெய்விகம் வாய்ந்த ஸ்பரிசத்தால் பிரம்மம் என்ற உறங்கும் சக்தி தனக்குள்ளே கண்விழித்தெழும்போது, சீடன் எல்லா இடங்களிலும் பேரின்பக் கடலைக் காண்கிருன்.

அப்படிப்பட்ட குருவிற்காக ஒரு சீடன் என்னதான் செய்யமாட்டான்? சீடன் அவரிடம் நன்றி பாராட்டுவது இயல்பு அல்லவா? "குருவைப் பிரம்மமாக அறிந்துகொள்" என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. தொழிலாகக் குருத்வத்தை ஏற்கும் ஒருவரிடம் இம்மாதிரியான உணர்ச்சி எழுவது சாத்தியமாகுமா? ஆனால் கடவுளைக் கண்ட ஒருவர் மீது அத்தகைய எண்ணம் எழுவது இயல்பாகும்.

ஒரு மனிதனைக் கடவுளாக மதிப்பது பெரிய அபசாரம் ஆகும் என்றும், அது காரணமாக, குருவைப் பிரம்மமாக மதிக்கத் தாம் விரும்புவதில்லை என்றும், குழந்தை போல வீண் விவாதம் செய்பவர்கள் சிலர் இருக்கிறார்கள்; அஞ்ஞானத்தாலும் துவைதக் கொள்கைகளாலும் பகவானுக்கும் அவரது படைப்பான மனிதனுக்கும் இடையே எல்லையற்ற இடைவெளி இருப்பதாக அவர்கள் பாவனை செய்துகொள்கிறார்கள். அவர்களுக்குச் சிரத்தையோடு அத்வைத வேதாந்தத்தைக் கற்கும்படியும், அத்துடன் ஆத்ம சாதனம் பழகும்படியும் போதிக்கிறோம்.

இந்த உலகில் நான் பல குருமார்களைப் பார்த்திருக்கிறேன்; அவர்களிடமிருந்து புத்திமதியையும் பெற்றிருக்கிறேன்; ஆனால் அவற்றால் ஒரு பயனும் நான் பெற்றதில்லை. அதற்குக் காரணம், பிரம்மத்தை அவர்கள் அனுபூதியில் உணர்ந்து மெய்ஞ்ஞானம் பெறுததே ஆகும். அவர்களிடம் உலகப்பற்று இன்னும் ஒழியவில்லை. அவர்களிடம் விவேகமோ வைராக்கியமோ இல்லை. சாதாரண குருவினிடமிருந்து புத்திமதி பெறுவது, குருடனிடம் ஓர் இடத்தின் திசையைப் பற்றிக் கேட்பது போலப் பயனற்றதாகும். புத்திமதியோடு ஞானசக்தியையும் கொடுக்கும் ஆற்றல் அவர்களுக்கு இல்லை.

பிரம்மத்தை உணர்ந்த குரு சீடனது காதில் மந்திரத்தை ஓதும்போதே அவனது மனதிற்குள் சக்தியைப் புகட்டி, அவனது வாழ்க்கையையும் புதுப்பிக்கிறார் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்; அந்தக் கருத்தை நானும் நம்புகிறேன். அவ்விதம் மந்திரதீட்சை பெற்ற அந்த நாள் முதற்கொண்டே சீடனது வாழ்க்கையில் ஒரு புதிய சிரத்தையும் ஒரு புதிய வாழ்க்கையும் தொடங்குகின்றன.

குருவைப் பற்றி இன்னும் சில கருத்துக்களையும் நாம் கேட்டு வருகிறோம். சிலர், "சீடன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும்சரி, மெய்யான குருவைப் பெற முடியுமானால், அவன் நிச்சயமாக முக்தி அடைந்து விடுவான்" என்று கூறுகிறார்கள். மற்றும் சிலர், "குரு எத்தகையவராக இருந்தாலும், சீடனிடம் சிரத்தையும் அன்பும் பக்தியும் இருந்தால்தான் அவன் முக்தி அடைவான்" என்கின்றார்கள். இந்த இரண்டுவிதமான கருத்துக்களையும் நாம் மறுப்பதற்கில்லை; ஆனால் இவை போன்ற நிகழ்ச்சிகள் இந்த உலகில் மிகவும் அரிதாகவே இருக்கின்றன. குரு, சீடன் ஆகிய இருவரும் தகுதியுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்பதுதான் பொதுவான விதியாகும்.

ஒரே மகானது சீடர்களுக்குள்ளே பெரும் வேறுபாடுகள் காணப்படுவதை நாம் பார்க்கிறோம். அதற்குக் காரணம் முழுவதும் சீடர்களின் இயல்புகளில் உள்ள வேறுபாடே ஆகும். சீடனிடம் பக்தியும் பணிவும் விடா முயற்சியும் இருக்குமானால், அவன் குருவின் போதனைகளை எளிதாகத் தன்மயமாக்கிக் கொள்கிறான். குருவுக்கும் சீடனுக்கும் உள்ள உறவைப் பற்றிச் சாஸ்திரங்கள் நமக்குக் கூறுவதிலிருந்து ஒன்று தெளிவாக விளங்குகிறது; அதாவது, சீடனுக்கு விதிக்கப்பட்டுள்ள கடமைகள் மூலம் அவனது மனமும் உடலும் பண்பட்டு, முடிவில் அவன் உண்மையான மனிதனாகிறான்.

இந்தக் காலத்தில் குருவின்மீது அத்தகைய பக்தியைக் காண்பது மிகவும் அரிது என்றுதான் சொல்லவேண்டும். பலர் குருபக்தி இல்லாமல் இருப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டதைப் போல இருக்கிறார்கள். இந்தக் குருபக்தி நமது நாட்டிலிருந்து மறைந்துவிடுமானால், ஊக்கம், சிரத்தை, பக்தி முதலிய எல்லா நற்குணங்களும் நிச்சயமாக அழிந்துபோய்விடும். அதனால், சுதந்திரம் என்ற பெயரில் சமுதாய வாழ்க்கையில் தறிதலைத்தன்மைதான் தலைவிரித்தாடும்.

ஒருவரைக் குருவாக அங்கீகரித்து ஏற்றுக்கொள்வதற்கு முன்பு நீ அவரைச் சோதிக்கலாம். ஆனால் ஒரு முறை குருவாக ஏற்றுக்கொண்ட பிறகு அவரது ஒரு வார்த்தைக்காகவும்கூட உனது உயிரையே பலியாகக்

கொடுக்கும் அளவுக்கு உன் மனதைத் தயாரித்துக்கொள்ள வேண்டும். இந்த அளவுக்குக் குருவை நாம் சார்ந்து நிற்போமானுல் நமது சுதந்திரத்தை இழக்க வேண்டியிருக்கும் என்றும், நாளடைவில் நாம் நமக்கென்று ஒரு தனிப் பண்பு இல்லாமல், சதா மாறிக் கொண்டிருக்கும் இயல்புடையவர்களாகி விடுவோம் என்றும் பலர் நினைக்கக்கூடும். அவ்விதம் பயப்படுவதற்குக் காரணம் எதுவுமில்லை. மெய்யான குரு சீடனது சுவாதீனத்தை ஒருகாலும் தடுக்கமாட்டார்; அதற்கு மாருக, அவனுக்கு வழிகாட்டியும் போதித்தும் இறுதியில் அவன் மனம் சுதந்திரமாக இருக்கும்படியும், சுயவலிமையுடன் சொந்தக் கால்களில் நிற்கும்படியும், புலன்கள், மனம், குலம், சமூகம் இவற்ருல் ஏற்படும் கட்டுக்களையெல்லாம் உதறிவிட்டுச் சுதந்திரமாகத் திரியும் பறவை போல வானத்தில் உயரப் பறக்கும் திறமையை அடையும்படியும் செய்வார். பிறரிடமிருந்து சில காசு பெறும்போதோ தங்கள் உடலுக்கு உதவியைப் பெறும்போதோ மக்கள் எவ்வளவு நன்றி பாராட்டுகிருர்கள்! அப்படியிருக்கும் போது, இந்த வாழ்க்கையின் சாரத்தைப் பற்றியும் உயர்வற உயர்ந்த பரம்பொருளைப் பெறும் வழியைப் பற்றியும் நமக்குப் போதித்தவரும், அதை நாம் அடையும் பொருட்டு ஓயாமல் தொடர்ந்து உதவி புரிந்தவரும் ஆன ஒருவரிடம் நன்றி பாராட்டுவதை அநீதி என்று நீ எப்படி நினைக்கமுடியும்?

இந்துக்களைப் போன்று அவ்வளவு நன்றியறிவுள்ள நாட்டினர் வேறு எவரும் இல்லை. இந்துக்கள் குருவிற்கு உரிய நன்றியை மறந்துவிடும் அன்றைய தினமே, அவர்கள் உண்மையான இந்துக்களாக இல்லாமற் போய்விடுவார்கள்.

மகாபாரதத்திலே உபமன்யுவின் குருபக்தியைப் பற்றிய கதையை நீ ஞாபகத்தில் வைத்துக்கொள். அத்தகைய சலியாத பக்தியும், குருமொழியின்மீது கொண்ட அளவற்ற சிரத்தையும் இந்தியாவைப் புகழ் என்ற மலையின் உச்சிக்கு ஒருகாலத்தில் உயர்த்தியிருந்தது. இனி மீண்டும் இந்திய நாடு உயர வேண்டுமானுல், குருபக்தியின் மூலமாகவும், குருவைக் கடவுளாகவே உணர்வதனுலும்—அதாவது நமது கற்பனையிலுள்ள கடவுளாக அல்ல, கண்முன் வாழும் கடவுளாக உணர்வதனுலும்—மட்டுமே அதைச் செய்ய முடியும்.

நமது வாழ்க்கையையே குருவுக்காகத் தியாகம் செய்ய நாம் தயாராக இருக்கும் போதுதான், பெருஞ்செயல்களை ஆற்றக் கூடிய திறமை வாய்ந்தவர்களாக நாம் இருப்போம்; நமது சுயமுக்தியை அடையும் திறமையைப் பெறுவதோடு, நமது தாய்நாட்டிற்கும், மனிதகுலத்தில் நமது இனம் முழுவதற்குமே ஏதாவது நல்ல தொண்டு செய்யும் திறமையையும் பெறுவோம். ✕

---



மரத்தில் கட்டிக் கிடக்கும் மாடு அந்த மரத்தைச் சுற்றியே மேய்ந்துகொண்டிருக்கும். அது போலவே, அடக்கப்பட்ட மனித மனம் உள்நோக்கிச் சதா சுழன்று பேரின்பத்தை ஊட்டும். அடக்கமில்லாத மனம் வெளியே ஓடிக்கொண்டே இருக்கும்; தன் போக்கின்படி எதையாவது எண்ணி நமக்கு வேதனையைத் தந்துகொண்டிருக்கும்.

— ஒரு சாது

மரணம் என்ருல் பயமாக இருக்கிறது. அசுபச்சொல் என்று அஞ்சுகிருேம். ஆனுல் அது தடுக்க முடியாத ஒன்று என்று ஏன் நாம் அறிவதில்லை? காசி செல்வதற்கு டிக்கெட் வாங்கி ரெயிலில் உட்கார்ந்துவிட்டால் பெஞ்சில் இருந்தாலும் சரி, நின்ருலும் சரி, தூங்கினுலும் சரி, அங்குக் கட்டாயம் போய்ச் சேர்ந்துதானே ஆகவேண்டும்! இது ஏன் நம் அறிவுக்கு எட்டவில்லை?

— ஓர் உண்மை



# சடையும் விசும்பும்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

காரைக்காலம்மையார் இறைவன் திரு வடிவத்தைக் கண்டு கண்டு மகிழ்கிறவர். அப்படிக் காணும்போதெல்லாம் அவருக்குப் பலவகையான கற்பனைகள் தோன்று கின்றன. அவனுடைய திருக்கோலத்தில் உள்ள பொருள்களை இணைத்து உவமை களையும் உருவங்களையும் புனைகிருர். அவை ஒருவகையில் அணிகளே அல்லவா? அந்த அணிகளைப் புனைந்து புனைந்து மகிழ்ச்சி அடைகிருர்.

இப்போது இறைவனுடைய திருமுடி யைப் பார்க்கிருர். அங்குள்ள விரிசடையில் அவர் பார்வை உலாவுகிறது. அந்தச் சடை யில் சிவபெருமான் கங்கையைத் தாங்கி யிருக்கிருன். வானின்று இறங்கி வந்த கங்கை அது அந்தத் திருமுடியில் பிறை விட்டு விளங்குகிறது. செவ்வண்ணச் சடை யில் அது அழகாக வெண்ணிலவை வீசிக் கொண்டு ஒளிர்கிறது. அங்கே பாம்பும் இயங்கிக் கொண்டிருக்கிறது. கங்கையை யும் மதியையும் பாம்பையும் ஒரு சேர இணைத்துப் பார்கிருர், இப்போது ஒரு கற் பனை உருவாகிறது.

'இந்த விரி சடையை யாம் காணும் போது வானத்தைப் போலத் தோற்றம் அளிக்கிறது' என்று எண்ணுகிருர்.

விரிசடையாம் காணில் விசும்பு.

எவ்வாறு அது வானத்தைப் போலத் தோன்றுகிறது? காரணத்தைச் சொல்கிருர்.

வானத்தில் ஆகாயகங்கை இருக்கிறது. பகீரதன் கங்கையை வருவிப்பதற்காகத் தவம் செய்தான். கங்கை இரங்கவில்லை. அது தருக்கினல் கலங்கியிருந்தது. "என்னை ஏற்றுக்கொள்வார் யார்?" என்ற அகம்பாவம் அதற்கு. அதனுல் அது 'கலங்கு புணர் கங்கை'யாக இருக்கிறது. பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவம் புரியவே, அவன் தவத்துக்கு இரங்கி அந்தக் கலங்கிய கங்கையை இறைவன் தன் சடாபாரத்தில் ஏற்றுக் கொண்டான். கலங்கிய நீர் ஓரிடத் தில் தங்கினுல் அது தெளிவுபெறும். அவ் வாறு தெளிவுபெற்ற கங்கையையே பகீரதன் வேண்டுகோளுக்கு இரங்கி அவனுடைய மூதாதையர்களின் என்பின் மேல் பாயும்படி செய்தான்.

கலங்கிய புனலையுடைய கங்கை அவன் சடையினூடு அலைதனை வீசிக்கொண்டு அசைந்தது.

கலங்கு புனற்கங்கை ஊடுஆடலாலும்.

தக்கனுடைய சாபத்தைப் பெற்ற சந் திரனுக்கு அபயம் தந்து இறைவன் பிறை யைத் தன் சடாபாரத்தில் எடுத்து அணிந்து கொண்டான். நல்ல இடத்தைச் சேர்ந்த மையால் அது கவலையின்றி இயங்குகிறது. அங்கேயிருந்து ஒளியை வீசுகிறது. கங்கை யின் ஊடே அது இயங்குகிறது.

இலங்கு மதி இயங்கலாலும்.

இறைவனுடைய திருமுடி உயர்ந்து விளங்கும் நீள்முடி. பலவகை நலங்களை உடையவன் இறைவன். அனந்த கல்யாண குணங்களை உடையவன். அவனுடைய நீண்ட முடியில் பாம்புகள் இயங்குகின்றன.

பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை ஆனால் இறைவன் திருமுடியின் மேல் அவை பகைமையை மறந்து குழந்தைகளைப் போலக் குலாவுகின்றன.

நலங்கொள்

பரிசுடையான் நீள்முடிமேல் பாம்பு இயங்கலாலும்.

வானில் கங்கை உண்டு; மதி உண்டு; இராகு கேதுக்களாகிய பாம்புகளும் உண்டு. இங்கே இறைவன் சடையிலும் அவை உள்ளன. ஆகவே இந்தச் சடாபாரம் விசும்பைப் போலத் தோற்றம் அளிக்கிறதாம்.

கலங்கு புனற் கங்கை ஊடு ஆட லாலும்,
இலங்கு மதி இயங்க லாலும், — நலங்கொள்
பரிசுடையான் நீள்முடிமேல் பாம்பு இயங்கலாலும்
விரிசடை யாம் காணில் விசும்பு.

என்று உருவகம் செய்து பாடுகிறார் அம்மையார்.

[பல நலங்களைக் கொண்ட தன்மையையுடைய இறைவனுடைய நீண்ட திருமுடியின் மேல் கலங்கிய புனலையுடைய ஆகாசகங்கை ஊடே அசைவதாலும், விளங்கும் பிறையானது இயங்குவதாலும், பாம்புகள் உலாவுவதாலும் அவனுடைய விரிந்த சடையை யாம் காணும்போது வானமாகத் தோற்றம் அளிக்கிறது.

கலங்கு புனல் என்றது, வானில் இருந்த நிலையைச் சுட்டியது. ஆடல் - அசைதல். இலங்கும் மதி – மறுவின்றி விளங்கும் பிறை ; மதி என்பது முழுத் திங்களைக் குறித்தாலும் இங்கே பிறையைச் சுட்டியது ; ''இருகோட்டொருமதி எழில்பெற மிலைச்சினே'' என்பது நக்கீரர் வாக்கு. பிறைக்கு மறு இன்மையின் அது விளக்கம் பெற்றிருக்கிறது. மறுவின் மையும் தக்க இடத்தில் இருக்கும் பெருமிதமும் அந்த விளக்கத்துக்குக் காரணமாகின்றன. நலம் – உயர்ந்த குணங்கள். பரிசு — 'இயல்பு. நீள்முடிமேல் என்பதை முன்னும்கூட்டிப் பொருள் செய்க. அது இடைநிலைவிளக்கு.

முடிமேல் கங்கை ஆடலாலும், மதி இயங்கலாலும், பாம்பு இயங்கலாலும், விரிசடை காணில் விசும்பு என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும்.

இறைவன் திருமுடி விசும்பைப் போலக் காட்சியளிக்கிறது என்பது கருத்து.]

அற்புதத் திருவந்தாதியில் 75–ஆம் பாடலாக அமைந்தது இது.



ஊசி காந்தத்தால் இழுக்கப்படுகிறது, பத்தினிப்பெண் தன் நாயகனுடனேயே தங்குகிறாள். கொடி செடியைச் சுற்றிகொள்கிறது. நதி கடலில் சங்கமமாகிறது. இது போலவே என் சிந்தனை பசுபதியின் பொற்பாதங்களை அடைந்து, என்றும் தங்குமானால், அதுவே பக்தியாகும்.

– ஆதிசங்கரர்

செல்லாத காசு தேடப்போய் மகாரத்தினம் அடைந்தது போலவும், ராகிக்கூழ் கேட்க அமுதம் பெற்றது போலவும், நீரில் நீச்சல் அடித்து ஓய்ந்தவன் கப்பலை அடைந்தது போலவும், தீர்த்தாடனம் செய்யப் புறப்பட்டவன் அருகிலேயே எல்லாத் தீர்த்தாடன பலனும் பெற்றது போலவும், ஆடையில்லாமல் தவிக்கும் ஸ்திரீ அண்மையில் ஆடை அடைந்தது போலவும், நான் ஸ்ரீ ராமபிரானைத் தரிசித்தது ஆயிற்று.

– ஸ்ரீ தியாகய்யர்

# கண்ணனும் கர்ணனும்

சரஸ்வதி

மகாபாரதப் போரில் பதினேழாம் நாளைப் போர் நடந்து முடிந்துவிட்டிருந்தது. மகாரதியான கர்ணனும் போர்க்களத்தில் கீழே விழுந்துவிட்டான். கர்ணனின் முடிவைக் குறித்துப் பாண்டவர்களின் பாசறையில் வெற்றிக் கொண்டாட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இத்தகைய உல்லாச வேளையில் பாண்டவர்களின் வெற்றிக்கு உறுதுணையாக விளங்கிய கண்ணன் மிகவும் கவலையுடன் உட்கார்ந்திருந்தார். அவருடைய வாய் அடிக்கடி, "இன்று இந்த மண்ணுலகினின்றும் தலைசிறந்த கொடையாளி மறைந்துவிட்டான்" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

தர்மபுத்திரரான யுதிஷ்டிரருக்கு எவரைப் புகழ்ந்தாலும் சரி, எவருடைய நல்ல குணங்களை எவ்வளவுதான் போற்றிப் பாராட்டினாலும் சரி, பொருமை ஏற்பட்டதில்லை. ஆனால் தனஞ்சயனுக்குத் தன் தலையாய எதிரியான கர்ணனைக் கண்ணன் புகழ்வதைக் கேட்க மிகவும் மனவருத்தம் ஏற்பட்டது. எனவே அவன் முகத்தைத் தொங்கவிட்டபடி அமர்ந்திருந்தான்.

அர்ஜுனனின் நிலையைக் கண்ட கண்ணன் அவனிடம், "அர்ஜுனா! உன்னைப் பார்த்தால் நான் கர்ணனை அநாவசியமாகப் புகழ்வதாக நீ நினைப்பதுபோல் தோன்றுகிறது. ஒரு காரியம் செய். நீ இப்போது என்னுடன் வா. தொலைவில் நின்றுகொண்டு நடப்பதைக் கவனி. கொடையாளியான கர்ணன் இன்னும் இறந்துபோகவில்லை. அவனுடைய உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. இப்போது இந்த நிலையில்கூட அவனுடைய கொடைத்தன்மையைக் காணலாம்" என்றார்.

இரவு ஆகிவிட்டிருந்தது. யுத்தபூமியில் பிணம் தின்னும் நரிகளின் ஆட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. இங்கும் அங்குமாகச் சிலர் வேதனையுடன் முனகிக் கொண்டிருந்தார்கள். போர்க்கருவிகளின் உடைந்த பாகங்கள், அம்புத்துண்டுகள், பிணக்குவியல்கள், இரத்தத்தால் சேறான தரை ஆகியவற்றினால் அந்த இடம் மிகவும் பயங்கரமாகக் காணப்பட்டது. அர்ஜுனனைச் சிறிது தூரத்தில் நிற்கச் சொல்லிவிட்டுக் கண்ணன் தான் மட்டும் அந்தணரைப் போல் வேடமிட்டுக்கொண்டு உரத்த குரலில், "கர்ணா! கொடையாளி கர்ணா! தாங்கள் எங்கே



இருக்கிறீர்கள்?" என்று கத்திக்கொண்டே நடந்தார். தரையில் மூர்ச்சையுடன் கிடந்த கர்ணன் தலையைத் தூக்கி, "என்னை அழைப்பது யார்? யாரப்பா சகோதரா! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

அந்தணர் கர்ணனின் அருகில் வந்துவிட்டார். அவர் கர்ணனிடம், "நான் மிகவும் நம்பிக்கையோடு உங்களை நாடி வந்திருக்கிறேன். எனக்குச் சிறிதளவு தங்கம் வேண்டும். மிகவும் கொஞ்சமாகக் கொடுத்தால் கூடப் போதும்!" என்றார்.

கர்ணனும் அவரிடம், "ஐயா! தாங்கள் என் வீட்டிற்குச் செல்லுங்கள். என் மனைவி தங்களுக்கு வேண்டிய அளவிற்குப் பொன்னும், பொருளும் கொடுப்பாள்" என்றான். சாதாரண அந்தணராக இருந்திருந்தால், கர்ணன் கூறியபடியே அவனது வீட்டிற்குச் சென்றிருப்பார். வந்திருப்பவர் யார்? எனவே, அவர் கர்ணனிடம் கோபத்தைக் காட்டும் வகையில், "கொடுக்க விருப்பமில்லையென்றால், இல்லையென்று சொல்லி விடுவதுதானே! இங்கும் அங்கும் ஏன் என்னை ஓடச் சொல்கிறாய்! நான் எங்கும் போகமாட்டேன். எனக்கு இரண்டு கடுகளவு தங்கம் கிடைத்தால் போதும்! இதற்காக நான் எங்கும் போகமாட்டேன்!" என்றார்.

கர்ணன் சிறிது நேரம் யோசித்தான். பிறகு அந்தணரிடம், "ஐயா! என் பற்களில் கொஞ்சம் தங்கம் வைக்கப்பட்டிருக்கிறது. தாங்கள் தயவு செய்து அதை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

அதைக் கேட்டதுமே அந்தணரின் முகம் வெறுப்பால் சுருங்கியது. அவர், "ஒரு பிராம்மணனிடம் போய் ஒரு மனிதரின் பல்லைப் பிடுங்கிக்கொள் என்று சொல்ல உனக்கு வெட்கமாக இல்லை?" என்று கோபத்துடன் கேட்டார்.

கர்ணன் என்ன செய்வான் இங்குமங்கும் பார்த்தான். அருகில் ஒரு சிறு கல் காணப்பட்டது. எப்படியோ மிகவும் கஷ்டப்பட்டு அந்தக் கல் இருக்கும் இடம் வரை தன் உடலை இழுத்துக்கொண்டு சென்றான். கல்லின் மீது பல்லை வைத்து இடித்தான். பற்கள் உடைந்துவிட்டன. அவற்றைக் கையில் எடுத்துக்கொண்டு அந்தணரைப் பார்த்து, "சுவாமி! இப்போது எடுத்துக்கொள்ளுங்கள்" என்றான்.

அதைப் பார்த்த அந்தணர், "சீசீ! இரத்தத்தில் தோய்ந்த புனிதமற்ற எலும்பு!" என்று கூறியபடி இரண்டடி பின்வாங்கினார். கர்ணன் மிகவும் கஷ்டப்பட்டுக் கத்தியால் தங்கத்தை மட்டும் பற்களிலிருந்து சுரண்டி எடுத்தான். அப்படியும் அதை ஏற்றுக் கொள்ள அந்தணர் மறுத்துவிட்டார். கர்ணன் அவரிடம் வில்லை எடுத்துக் கொடுக்குமாறு கேட்டான். அதற்கும் அவர் முடியாது என்று சொல்லிவிட்டார்.

மறுபடியும் கர்ணன் தரையில் தன் உடலை இழுத்தபடி வில் இருக்கும் இடத்திற்குச் சென்றான். மிகவும் கஷ்டப்பட்டு அவன் தன் தலையால் அழுத்தி வில்லில் பாணத்தை வைத்து வருணாஸ்திரத்தை விட்டான். உடனே அதிலிருந்து உண்டான மழையால் கர்ணனின் கையில் இருந்த பற்களில் இருந்த இரத்தம் நீங்கித் தங்கம் சுத்தமாகக் கழுவப்பட்டுவிட்டது. இப்போது கர்ணன் மிகவும் சிரத்தையோடு அதை அந்தணரிடம் நீட்டி ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினான்.

மறுவினாடியே, 'வேண்டிய வரத்தைக் கேள், கர்ணா!" என்று கேட்டபடி அந்தணர் வேஷத்தில் வந்த கண்ணன் வெளிப்பட்டுக் கர்ணனுக்குக் காட்சி கொடுத்தார். அர்ஜுனனுக்கு மிகவும் வெட்கமாய்ப் போய் விட்டது. அந்த இடத்திலேயே நின்றுவிட்டான். கர்ணன் இவ்வளவுதான் கூறினான், "மூவுலகிற்கும் அதிபதியான தாங்கள் என் உயிர் பிரியும் இந்தவேளையில் இங்கு வந்திருக்கும்போது நான் என்ன வரத்தை எதற்காகக் கேட்க வேண்டும்!"

உடனே கர்ணனின் உயிர் கண்ணனின் திருவடிகளில் தலையை வைத்தபடி பிரிந்து விட்டது.

கொடையாளியான கர்ணன் பக்தியிலும் சளைத்தவன் அல்ல என்பது எவ்வளவு தெளிவாகிவிட்டது!

   

# இராமானுஜ வேதாந்தம்

எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்



## முன்னுரை

963 வருஷங்களுக்கு முன்பு கி. பி. 1017 ஆம் ஆண்டு சித்திரை மாதத்தில், சுக்ல பட்ச பஞ்சமியில், திருவாதிரை நட்சத்திரத்தில், வியாழக்கிழமையன்று, சிம்ம லக்கினத்தில், பிற்பகலில், ஸ்ரீ பெரும்பூதாரில் ராமானுஜர் அவதரித்தார். அவர் 120 வருஷங்கள் நிறை வாழ்வு வாழ்ந்து, கி. பி. 1137 - இல் மாசி மாதத்தில் சுக்லபட்ச தசமியில் திருவாதிரை நட்சத்திரத்தில் சனிக்கிழமையன்று நடுப் பகலில் ஸ்ரீ ரங்கத்தில் பூவுலகினின்று மறைந் தார்.

தொன்மையான வேதநெறிக்கு மூன்று வகையான விளக்கங்களை வெளியிட்டவர் கள் ஆதிசங்கரர், ராமானுஜர், மத்வர் என்னும் மூன்று ஆசாரியர்கள். இவர்கள் முறையே கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் கன்னட நாட்டிலும் பிறந்து நிலைநாட்டிய அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என்னும் மூன்று நெறிகளும் இன்றும் இந்தியா முழுவதிலும் லட்சக்கணக்கான மக்களால் பின்பற்றப்படுகின்றன. இவர்களில் ராமா னுஜரே தமிழ்நாட்டில் அவதரித்தவர்.

ஸ்ரீபெரும்பூதாரில் கேசவ ஸோமயாஜி பூமிதேவி என்ற பக்தி நிறைந்த தம்பதி களுக்கு ஸ்ரீராமானுஜர் மகவாக அவதரித் தார். தமிழ்நாட்டில் பரமவைதிக குடும்பத்தில் பிறந்தமையால், சம்ஸ்கிருத வேதங்களையும் ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களையும் ஒருமைப்படுத்தி, சங்ககாலம் முதற் கொண்டே தமிழ்நாட்டில் விளங்கிவந்த இரு மொழி ஒருமைப்பாட்டு நெறியான விசிஷ்டாத்வைத வைணவ நெறியை நிலை நாட்டினர் ஸ்ரீ ராமானுஜர். இந்த வகையில் தென்னாட்டுக்கும் வடநாட்டுக்கும், தமிழுக் கும் சம்ஸ்கிருதத்திற்கும் உள்ள ஒருமைப் பாட்டின் முழு உருவமாக ஸ்ரீ ராமானுஜர் விளங்குகிறார்.

இவரது கொள்கைகளைச் சுருக்கமாக இங்கு ஆராய்வோம்.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் சித், அசித், ஈசுவரன் என்ற மூன்று பிரிவு களுக்குள் அடங்கும். இவற்றில் 'சித்' அல்லது 'சேதனம்' என்பது அறிவுள்ள ஜீவர்களைக் குறிக்கும். 'அசித்' அல்லது 'அசேதனம்' என்பது அறிவற்ற பொருள் களைக் குறிக்கும். சேதனரான ஜீவர்களும்

---

### வழிக்குக் கட்டுச்சோறு

*இந்த உடம்பை விட்டு உயிர் இறுதியில் பயணம் செய்யப்போகிறதே; அப்போது ஏதாவது கட்டமுது கொண்டு போக வேண்டாமா? அதில் ஒருவருக்குமே கவனம் இல்லை. முருகவேளைக் குறித்து நினைப்பற நினைத்துத் தவம் சிறிது நேரமாயினும் புரியவேண்டும். அந்தத் தவம் நமது மரண யாத்திரையின்போது அந்தத்தொலையாத வழிக்குக் கட்டமுதாக வந்து உதவும். இதனை யாவரும் மறந்துவிடக் கூடாது. அருணகிரிநாதர் கூறுகிறார் :—*

*"மலையாறு கூறெழ வேல்வாங்கினானை வணங்கியன்பின் நிலையான மாதவஞ் செய்குமினோ நும்மை நேடிவரும் தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையுங்கண்டீர் இலையாயினும் வெந்த தேதாயினும் பகிர்ந் தேற்ற வர்க்கே."*

கணக்கற்றவர்கள். அசேதனமான பொருள்களும் கணக்கற்றவை. உண்மைப் பொருள்களான இவையனைத்தையும் என்றும் தன்னை விட்டுப் பிரியாத உடலாகக் கொண்டவனாக இருக்கும் ஸ்ரீமந்நாராயணனே ஈசுவரன் எனப்படும் பரம்பொருள்.

சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் கொண்ட மூலப்பிரகிருதி என்னும் அசேதனப் பொருளின் விகாரமான இந்த உலகம் அந்த நாராயணனால் அவ்வப்போது ஆக்கி அளித்து அழிக்கப்பட்டு, அவனது அளவற்ற விளையாட்டிற்கு இலக்காவதனால் 'லீலாவிபூதி' எனப்படுகிறது. இதில் உள்ள ஜீவர்கள் புண்ணிய பாவங்களால் கட்டுப்பட்டவர்கள். ஆகையால் பத்தர் (பந்தப்பட்டவர்) எனப்படுவர்.

என்றும் உள்ளதாகவும், (ரஜோகுணமும் தமோ குணமும் கலக்காத) சுத்தசத்துவ குணமுடையதாகவும், இறைவனின் ஸ்ரீவைகுண்டம் எனப்படும் பரமபதம் விளங்குகிறது. அந்த ஸ்ரீவைகுண்டம் பகவானுக்கு என்றும் ஆட்பட்டிருக்கும் அளவற்ற நித்திய சூரிகளாலும், இந்த லீலாவிபூதியிலிருந்து ஒரு காலத்தில் முக்தி பெற்ற அளவற்ற முக்தர்களாலும் நிறையப் பெற்றிருப்பதால், நித்திய விபூதி என்று புகழப்பெற்றிருக்கிறது.

'விபூதி' என்னும் சொல் செல்வம் என்று பொருள்படும். இந்த இரண்டு உலகங்களும் பரமாத்மாவான நாராயணனுடைய செல்வமாதலால் உபயவிபூதிகள் எனப்படுகின்றன.

லீலாவிபூதியிலுள்ள பத்த சேதனர் (பந்தப்பட்ட ஜீவர்) நித்திய விபூதிக்குச் சென்று ஸ்ரீமந்நாராயணனை அனுபவித்து ஆட்செய்வதே 'பரம மோட்சம்' என்று சம்ஸ்க்ருத சாஸ்திரங்களிலும், 'நல்வீடு' என்று ஆழ்வார்களாலும், 'வீறுபெறு துறக்கம்' என்று சங்ககாலத் தமிழர்களாலும் குறிக்கப்படுகிறது.

இவ்விதம் ஜீவர்கள் விடுபேற்றை அடைவதற்கு அறிய வேண்டியவை ஐந்து விஷயங்கள் —1. எல்லா உலகையும் உடையவனாகிய இறைவனைப் பற்றிய உண்மையாகிற இறைநிலை, 2. அவனுடைய உடைமைகளில் உயர்ந்த ஜீவர்களாகிற நம்மைப் பற்றிய உண்மையாகிற உயிர்நிலை, 3. 'நல்வீடு' பெற்று நாம் அடையும் பயனாகிய வாழ்வு, 4. நெறி அல்லது உபாயம், 5. இது வரையிலும் இந்த நல்வாழ்க்கையை அடைய முட்டுக்கட்டையாக இருந்த தடைகள். இந்த ஐந்து விஷயங்கள் பற்றி ஸ்ரீ ராமானுஜர் காட்டும் நெறிகளை அடுத்த ஐந்து தலைப்புகளில் விளக்குவோம்.

## இறை நிலை

ராமானுஜ நெறியில் இறைவனின் நிலை விளக்கப்படுகிறது.

இறைவனாகிற ஸ்ரீமந்நாராயணன் தாழ்வுகள் அனைத்துக்கும் எதிர்த்தட்டானவன். நற்குணங்கள் அனைத்துக்கும் கொள்கலமானவன்.

தன்னிலும் வேறுபட்ட எல்லாச் சேதனரையும் (உயிர்களையும்), அசேதனப் பொருள்களையும் (ஜடப்பொருள்களையும்), தன்னை விட்டுப் பிரியாத உடலாகக் கொண்டிருப்பதனால் எல்லாம் தானே என்றும் சொல்லும்படி இருப்பவன். ஆயினும், சரீரமாக இருக்கும் அவற்றின் தாழ்வுகளால் தீண்டப்படாதவனாக இருப்பவன். எல்லாக் காலத்திலும் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன். அறிவும் ஆனந்தமுமே வடிவாக இருப்பவன்.

எல்லையற்ற அறிவு, பலம், ஈசுவரத்தன்மை, வீர்யம், சக்தி, தேஜஸ், நீர்மை, அன்பு, மென்மை, நேர்மை, உயிர்களிடத்து நட்பு, நடுநிலைமை, கருணை, இனிமை, கம்பீரத்தன்மை, வண்மை, திறமை, நிலையுடைமை, தீரத்தன்மை, சூரத்தன்மை, பராக்கிரமம், வேண்டடத்தக்கதெல்லாம் பெற்றிருத்தல், நினைத்ததெல்லாம் நடத்தும் வல்லமை, அடியார்களது காரியம் தன் பேருயிருக்கை, அவர்களிடத்துச் செய்ந்நன்றி மறவாமை முதலான கணக்கற்ற கல்யாண குணங்களை உடையவன்.

இந்தக் கல்யாண குணங்களை வெளிப்படுத்துவதற்காகவே கணக்கற்ற திருமேனிகளைக் கொண்டிருப்பவன்.

தனக்கு இனியதாய், தக்கதாய், காலத்தால் வேறுபடாததாய், நினைத்தற்கு அரியதாய், அப்ராக்ருதமான (லௌகிக சம்பந்தமற்ற) சுத்த சத்துவப் பொருளால் ஆனதாய், எப்போதும் இருப்பதாய், குற்றமற்றதாய், ஒப்பற்ற ஒளியுடையதாய், அவயவ அழகு, மேனியழகு, நறுமணம், மென்மை, நித்திய யௌவனப்பருவம் முதலிய கணக்கற்ற குணங்களுக்குக் கொள்கலமாக இருப்பது இவன் திருமேனி.

கர்மம் காரணமாக ஏற்படும் ப்ராக்ருத அழுக்கு உடம்புகளைக் காட்டிலும் மிகவும் வேறுபட்டதாய், பக்தர்களுக்கு அருள் புரிவதற்காக ஈசுவரனால் விரும்பியே ஏற்றுக் கொள்ளப்பட்டதாய், அப்ராக்ருதமாக இருப்பது அவனுடைய பரஞ்சோதி உருவம்.

அந்தத் திருமேனியில் மிகவும் அழகிய பல திருவாபரணங்களும், சங்கம், சக்கரம் முதலிய தெய்விக ஆயுதங்களும் இருக்கின்றன.

சேதனர்களை (ஜீவாத்மாக்களை) ஈசுவரனோடு சேர்த்துவிடுவதையே இயல்பாக உடையவள் ஆகையாலே, சேதனர் அனைவருக்கும் தாயாய், நாராயணனுக்கு என்றும் ஆட்பட்டிருப்பதால் அவனுக்கு அப்ராக்ருத பத்தினியாக இருக்கும் லட்சுமிதேவியையும், அவளுக்கு ஆட்பட்ட பூமிதேவி முதலானவர்களையும், திவ்யமஹிஷிகளாக உடையவன்.

பரமபதத்தில் இந்த இறைவனுக்கே என்றும் ஆட்செய்து வாழும் ஆதிசேஷன், கருடன் முதலான கணக்கற்ற நித்தியசூரிகளையும் முக்தர்களையும் உடையவன். இத்தகைய பெருமை உடையவனாக, பரமபதம் என்றும், வைகுண்டம் என்றும், வேத வேதாந்தங்களில் புகழப்பெறும் மேல் எல்லையற்ற அப்ராக்ருத நித்திய விபூதியில் இருந்து கொண்டு அந்த உலகத்தையும், ப்ராக்ருதமாய், பிரகிருதி, புருஷர்கள் எனப்படும் ஜீவர்கள், காலம் என்னும் மூவகைத் தத்துவங்கள் அடங்கிய கீழ் எல்லையற்ற லீலா விபூதியான இந்த உலகத்தையும் ஆட்சி செலுத்திக்கொண்டிருப்பவன்.

இந்த உலகில் கர்மத்தால் கட்டுப்பட்டுக் கிடக்கும் சேதனரை ஆட்கொண்டு, அந்த உலகிற்கு அழைத்துச் செல்வதற்காக வேதம் முதலான சாஸ்திரங்களை அளித்து, ராமன், கிருஷ்ணன் முதலான கணக்கற்ற அவதாரங்களையும் எடுப்பவன்; கோவில்களில் அர்ச்சாவதாரமாகவும் எழுந்தருளியிருப்பவன். ஆழ்வார்கள், ஆசாரியர்கள் போன்ற ஞானிகளையும் அவதரிக்கச் செய்பவன். இந்த உலகில் சேதனரைத் திருத்தி ஆட்கொள்வதற்காகவே சோம்பாமல் இந்த உலகைப் படைத்து, ரட்சித்து, அழித்துக்கொண்டும், அவதரித்து அருஞ்செயல்களைப் புரிந்து கொண்டும் இருப்பவன்.

இப்படி இவன் செய்வதற்குக் காரணம் அனைத்துலகிற்கும் சுவாமியாகவும் (உரிமையாளனாக, தலைவனாக), ஆதாரமாகவும், நியமிப்பவனாகவும், ரட்சகனாகவும் இருப்பதே யாகும்.

மிகுந்த ஞானசக்திகள் படைத்த பிரம்ம தேவன், சிவன் முதலான தேவர்களும் இவனால் படைத்து அளித்து அழிக்கப்படும் ஜீவர்களே ஆவர். ஒத்தாரும் மிக்காரும் இல்லாத ஆதியஞ்சோதியாக இருப்பவன் இவன்.

நாராயணன், விஷ்ணு, ஹரி, அனந்தன் முதலான கணக்கற்ற பெயர்களை உடையவன் இவன். உண்மையில் உலகிலுள்ள எல்லாப் பொருள்களின் பெயர்களும், அவற்றுக்கு அந்தர்யாமியான இவனுடைய பெயர்களுமாகும்.

ஆகையால் எந்தப் பெயராலும் வேதங்களும் ஞானிகளும் இவனைக் குறிப்பர். தன்னால் படைக்கப்பட்ட பொருள்களுக்குத் தன் பெயர்களில் சிலவற்றை இவன் கொடுத்திருக்கிறான். ஆயினும் நாராயணன் முதலான ஆயிரக்கணக்கான நாமங்களைத் தன் பெயர்களாக வைத்துக்கொண்டும் இருக்கிறான். அதனாலேயே இந்தப் பெயர்களால் இவனை அழைப்பதில் ஞானிகள் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள்.

இந்தப் பெருமைகளையெல்லாம் இவனுக்கு வேதம் முதலான சம்ஸ்க்ருத நூல்களும், ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தங்களும், சங்ககால நூல்களான பரிபாடல் முதலானவையும் காட்டுகிறபடியால் ராமானுஜர் நெறி மிகவும் தொன்மையான நெறி என்பது விளங்கும்.

ராமானுஜ வேதாந்தம் உயிரைப் பற்றியும் முக்தி பற்றியும், முக்தி பெறுவதற்கு உபாயம்பற்றியும் தெரிவிக்கும் கருத்துக்களை அடுத்துவரும் இதழில் விரிவாக ஆராயலாம்.

✲ ✲ ✲ ✲

# திருமந்திரம்

**ராஜம் ஐயராமன்**



உயிர்கள் அனைத்தும் என்றும் இன்பத்துள் திளைத்து மகிழ வேண்டும் என்பதே பரம கருணாமூர்த்தியான இறைவனின் திருவுள்ளம். அங்ஙனமாயின் அனைத்து உயிர்களின் துன்பங்களைக் களைந்து இன்பமயமான உலகைப் படைக்காமல் ஏன் இன்ப துன்பம் நிறைந்த வாழ்வாகப் படைத்துள்ளான்? இது மிகவும் ஆழ்ந்து சிந்திக்கத் தக்க வினாவாகும். இதற்குப் பலர் பலவிதமாக விளக்கம் கூறுகின்றனர். நமது சமயகுரவர்கள் கூறும் விளக்கம் மிகவும் சிந்திக்கத் தக்கது. அதாவது சகல சீவராசிகளும் ஒரேவிதமான துன்பங்களைப் பெறவில்லை. அவை இன்பத் துன்பங்களை கலந்தே அனுபவிக்கின்றன. இதற்குக் காரணம்: ஆன்மா மும்மலங்களால் தளைப்பட்டுத் தன்னை அறியாமையுள் அமிழ்த்தி அல்லற்படுகிறது. நல்வினையும் தீவினையும் ஆன்மாவைத் தளைக்கின்றன. இந்தத் தளைகளினின்று விடுபட்டு, பாவ புண்ணியம், நன்மை தீமை, இன்ப துன்பம், மான அவமானம், வெற்றி தோல்வி இவற்றில் சமபாவனை கொண்டு, நல்வினை தீவினை இவற்றிற்கு மேலாக 'இருவினையொப்பு' என்ற பற்றற்ற நிலை வரவேண்டும் என்பதற்காகவே இறைவன் உலகை இன்ப துன்பம் நிறைந்த வாழ்வாகப் படைத்துள்ளான் என்றனர்.

'இருவினையொப்பு' என்ற தகுதி எளிதில் அடையப்படுவதன்று. நாவுக்கரசர் நீற்றறையை நீரோடையாகக் கருதினார். ஓடும் பொன்னும் அவருக்கு ஒன்றாயின. இத்தகைய மனநிலையே இருவினையொப்பு என்ற நிலையாகும். இந்த மனநிலையை எந்த அளவு அடைகிறோமோ அந்த அளவு மலமானது தன் வலியிழந்து போகிறது. இதனையே மலபரிபாகம் என்பர்; அதாவது மலங்கள் நீங்கும் நிலையே மலபரிபாகம் ஆகும். இந்த மலபரிபாகம் நேரும் அளவு இறைவனது அருட்சக்தி ஆன்மாவின் மீது விழுகிறது. இதுவே சக்தி நிபாதம் எனப்படும். இறைவனது அருட்சக்தியாலேதான் ஆன்மா இறைவனை காணமுடியும்.

இந்தக் கருத்தையே மணிவாசகரும் 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்கிறார். சிவயோகிகள் தமது ஆன்மிகப் பயணத்தை இந்த இடத்திலிருந்தே தொடருகின்றனர். ஆன்மா பிறவித் துன்பங்களிலிருந்து நீங்கி சகல பந்தங்களிலிருந்து விடுதலை பெற்றுச் சிவனை அடைதலே முடிவான

---

பக்தி, ஞானம், கர்மம் ஆகிய மூன்றும் வேறு வேறு என்பதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். சகுணம் எவ்விதம் நிர்க்குணமோ அது போலவே பக்தியும் ஞானமும் அமைந்திருக்கின்றன. ஒன்று முதல், மற்றொன்று கடைசி: ஒன்று முதற்படி, மற்றொன்று கடைசிப் படி என்பதையும் நான் ஒப்பவில்லை. கர்மமே பக்தி, பக்தியே ஞானம். ஒரு துண்டு பர்பியில் இனிப்பும் நிறையும் உருவமும் உள்ளது. மூன்றையும் வேறாகப் பிரிக்க முடியாது. ஒவ்வோர் துண்டிலும் மூன்றும் கலந்தே உள்ளன. எத்தனை சிறிய துண்டானாலும் சரி, ஒன்றில் இனிப்பும் மற்றொன்றில் நிறையும் இன்னொன்றில் உருவமும் காண முடியாது; பிரிக்கவும் முடியாது. ஆனால் நாக்கில் வைக்கும் போது சுவை ஒன்றையே உணர்கிறோம். நிறையும் உருவும் அதில் மறைந்துள்ளது. அதுபோன்றே கர்ம பக்தி ஞானங்களும்.



— துளசிதாசர்

லட்சியமாகும் இதனையே வீடுபேறு, முக்தி என்று அழைக்கிறோம். ஆன்மா இந்த முடிவான லட்சியத்தை அடைவதற்கு நமது இந்து மதத்தில் சமயகுரவர்களும் மெய்ஞ்ஞானிகளும் ரிஷிகளும் சித்தர்களும் இறையருளால் அவ்வப்போது தோன்றி வழி காட்டிச் சென்றிருக்கிறார்கள். அவர்களில் ஒருவரே திருமூலர் என்பவர் இவர் இயற்றிய சிவாகம நூலே திருமந்திரம் ஆகும்.

திருமூலருக்கு முன்பு தமிழ்நாட்டில் தமிழ் மொழியில் சைவ சித்தாந்த நூல் ஏதுமில்லை எனலாம். திருமந்திரமே சைவ சித்தாந்த முதல்நூல் எனலாம். இதுவே எல்லா நூல்களுக்கும் தாய்நூல் என்றும் கூறலாம். இத்தகைய சிவஞானத் திருநூலாகிய திருமந்திரம் பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகும். இதற்குப்பின் இரண்டு திருமுறைகள் சேர்க்கப்படும் எண்ணமில்லாத அக்காலத்தில், ஆண்டவனைப் போற்றிப் புகழ்ந்து பாடும் தோத்திரத்தொகுப்பான ஒன்பது திருமுறைகளுக்குப் பின் இறைவனைச் சென்றடையும் சிவயோகநெறியினை கூறும் பத்தாவது திருமுறையாக இது அமைந்துள்ளது.

நம் மறையோகியாகிய திருமூலர் ராமாயண காலத்தைச் சேர்ந்தவர் என்றும், அதாவது ஏறக்குறைய 8000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்றும், சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர், சிவயோக மாமுனி, பதஞ்சலி முனிவர், வியாக்கிரபாதர், உபமன்யு, வசிட்டர், பஞ்சவடி அகத்தியர், கௌசிகர், கௌதமர், சதானந்தர், தசரத ராமர், வாலிசுக்கிரீவர், ராவணன் முதலியோர் திருமூலருக்கு சமகாலத்தவர் என்றும் வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். மேலும், இவர் கி.மு. 6000 முதல் கி.மு. 100 வரை வாழ்ந்தவர் என்றும் தெரிகிறது.

### நூலின் அமைப்பும் அதன் சிறப்பும்

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களை உடையது. ஒன்பது ஆகமங்களின் சாரமே ஒன்பது தந்திரங்களாகும்.

முதலாவது தந்திரத்தில், மனித இனம் முழுமைக்கும் வேண்டிய அடிப்படையான அறப்பண்புகள்பற்றிக் கூறுகிறார். மனிதன்

### பழநிக் கதைத் தத்துவம்

இறை என்ற சொல் இறு என்ற பகுதியடியாகப் பிறக்கிறது. இறைவன் எல்லா இடங்களிலும் எல்லா பொருள்களிலும்தங்கியிருக்கிறான். அதனால் அவன் அணுவுக்கும் அணுவாக இருக்கிறான். எல்லாப் பொருள்களும அவனிடத்தில் தங்க இருக்கிறான். அதனால் பெரிய பொருளுக்கும் பெரிய பொருளாகிறான். 'அணோரணீயான் மஹதோ மஹீயானாத்மா' என்பது சுருதி. ஆகவே எல்லாவற்றிலும் தங்கியும் எல்லாம் அவனிடத்தில் தங்கவும் இருக்கிறபடியால் இறை எனப் பெற்றனன். இதைத்தான் பழநிக் கதை விளக்குகிறது. ஒரு பழம் காரணமாக விநாயகர் சிவபெருமானை வலம் வந்தார். முருகவேள் அகில உலகங்களையும் வலம் வந்தார்.

அதன் உட்பொருள் யாது? சிவத்துக்குள் எல்லாம் அடங்கியிருக்கின்றன என்ற உண்மையை முருகன் அறியமாட்டாரா? இனி, சர்வ வல்லமையுடைய வல்லபை கணபதிக்கு உலகங்களை ஒரு நொடியில் வலம் வரக்கூடிய ஆற்றல் இல்லையா? உண்டு. சிவம் என்ற ஒன்றுக்குள்ளே எல்லாவற்றையும் கண்டார் விநாயகர். எல்லாவற்றுக்குள்ளும் சிவத்தைக் கண்டார் முருகர். இதுதான் அதனுடைய தத்துவம். இதனைக் கருத்தில் இருத்துங்கள். யாவையுமாய் அல்லையுமாய், ஒன்றாய்ப் பலவாய் என்ற திருவாக்குகளைச் சிந்தியுங்கள்.

கடைப்பிடிக்க வேண்டிய பேரறங்களான தூய்மை, தன்னடக்கம், பற்றின்மை, சத்தியம், அஹிம்சை போன்றவற்றின் பல்வேறு தோற்றங்களான யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, அன்புடைமை, நடுநிலைமை, பிறன் மனை நயவாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, அரசன் கடமை, அந்தணர் கடமை போன்ற தனிமனிதனின் அறத்தையும், சமூகச்சூழலின் அறம் பற்றியும் இருபத்து நான்கு தலைப்புக்களில் விளக்கியுள்ளார். இந்தக் கருத்துக்கள் அனைத்தும் திருவள்ளுவர் கருத்துக்குச் சமமாகக் காணப்படுகின்றன.

மனிதன் அறப்பண்பால் பெறப்படுவது இறையருள் ; ஆதலின் இரண்டாம் தந்திரத்தில் இறைவன் பெருமை பற்றியும், புராணக் கதைகளில் உள்ள மெய்ப்பொருளை உணர்தல், சிவனது எட்டு வீரச் செயல்கள், இறைவனின் ஐந்தொழிலான படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகியவைப் பற்றியும், சக்தி சிவன் விளையாட்டால் உண்டான சீவன்கள் பற்றியும், சிவநிந்தை தீது, கோயிலை அழிப்பது தீது, குருநிந்தை தீது, பெரியாரைத் துணைகோடல் ஆகியவை பற்றியும் கூறுகிறார்.

மூன்றும் தந்திரம்— இதில் இறைவனை அடைவதற்கு உரிய சிவயோக நெறி பற்றியும், அதனால் அடையும் சித்திகள் பற்றியும் விளக்குகிறார்.

நான்காம் தந்திரம் — இதில் உபாசனை யாகச் சக்கரங்களை அமைத்து வழிபடும் முறை பற்றியும், திருவம்பலச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனபதிச் சக்கரம், நவாக்கரிச் சக்கரம், ஏரொளிச் சக்கரம், பஞ்சதாசாட்சரி மந்திரம், வைரவி மந்திரம் முதலிய பல மந்திரங்களுக்கான மார்க்கம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

ஐந்தாம் தந்திரம் — சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ் சுத்த சைவம் ஆகியவை பற்றியும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நெறிகளையும், அவற்றால் அடையும் சாலோகம் சாமீபம் சாருபம் சாயுச்சிய நிலைகள் பற்றியும் அந்த நிலை நின்று பக்குவமடைந்தால் சக்தி நிபாதம் என்ற அருட்சக்தி இறங்குவதாகவும் கூறுகிறார். பின்பு புறச் சமயங்களைக் கண்டித்து, உட்சமயங்களை ஏற்புடையவை என்று கூறுகிறார்.

ஆறாவது தந்திரம் — சிவகுரு தரிசனம், பக்குவன், சீடனது இலக்கணம், திருநீற்று மாண்பு, துறவு, தவம், இவற்றால் அடையும் திருவடிப்பேறு முதலியன இதில் அடங்கும்.

ஏழாவது தந்திரத்தில் ஆறு ஆதாரங்கள், ஆறு லிங்கங்கள், அடியார், சிவபூஜை, மகேசுரபூஜை, குருநிந்தை, கூடாஒழுக்கம் முதலியவை பற்றிப் பேசுகிறார்.

எட்டாவது தந்திரம்— இது அதிகமான தலைப்புகள் கொண்டதாகும். பதினெட்டு அவத்தைகள், ஆறு அவத்தைகள், 'தத்த்வமஸி', 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற மகா வாக்கியங்களைப் பற்றிய ஆராய்ச்சி, முப்பதங்கள், மூன்று பரங்கள், மூன்று துரியங்கள், மூன்று முத்திகள், மூன்று ஸ்வரூபங்கள், மூக்காரணங்கள், முப்பாழ் என்பன பற்றிக் குறிக்கப்பட்டுள்ளன.

ஒன்பதாம் தந்திரம்— அதி சூக்குமப் பஞ்சாட்சரம், சிவதரிசனம்; குரு, குருமடம், ஞானகுரு தரிசனம், ஞானம் மலர்தல், உண்மை ஞானத்தின் சிறப்பு முதலியன பற்றிப் பேசுகிறார்.

இப்படித் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களும் நூற்றுத் தொண்ணூற்றைந்து உட்பிரிவுகளும் கொண்ட மகத்தான ஞான நூல். இதில் காணப்படும் சக்கர முறைகளும், யோக முறைகளும் நல்ல குருவின் மூலம் தெளிதல் மிகவும் சிறப்பு. ஆனால் அத்தகைய பாடல்கள் மிகக்குறைவே. மற்றப் பாடல்கள் எளிமையும் இனிமையும் கொண்டு நன்கு விளங்குகின்றன. திருக்குறளும் பகவத்கீதையும் எப்படி உலகப் பொது நூலாகவும் மறை நூலாகவும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றனவோ அது போல் திருமந்திரம் ஓர் மறைநூல் என்பதைத் திருமந்திரத்தை படிப்பவர்கள் உணர முடியும்.

திருமூலர் சைவ சமயத்தை தம் சமயமாகவும், சிவனையே முழுமுதற் கடவுளாகவும் நினைத்திருந்தபோதிலும் சமயச்சார்பற்ற நிலையில் நின்று வாழ்வில் மனிதன் தெய்வநிலை அடையத் தேவையான வழிகளைக் கூறுகிறார். மனிதன் இத்தகைய தெய்வநிலை அடைவதற்கு முன்பு கருமத்தை முற்றும் துறக்க இயலாது. அப்படி இயல்பாகக் கருமம் நழுவி ஞானம் அடைவதற்கு வலவித்தாக இருப்பது பஞ்சாட்சர மந்திரமே என்று அவர் உறுதியாகக் கூறுகிறார். அவர் கூறும் வழிநின்று நாம் சகல பந்தங்களினின்று விடுதலை பெற்றுத் தேகத்தை வென்று, உடையவனை இந்த உடலுக்குள் காண முயல்வோமாக. □




# தானம் பெற ஆளில்லை

எம். நாகசுப்ரமணியம்

தர்மபுத்திரர் ஏழை எளியவர்களிடம் மிகவும் கருணை கொண்டவர் வறியோருக்கு அவர் தாராளமாகத் தானதர்மங்கள் செய்வது வழக்கம்.

ஒரு சமயம் தர்மபுத்திரருக்குத் தமது ஈகைக் குணத்தையும் விருந்தோம்பும் பண்பையும் குறித்து இலேசாகக் கர்வம் தோன்றியது. அவரது உள்ளத்தில் கர்வத்தின் சாயை படிந்தவுடனே பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அதை அறிந்துகொண்டார். அத்துடன் தர்மபுத்திரரைத் திருத்தி நல்வழிப்படுத்த ஒரு படிப்பினையைத் தரவும் அவர் முடிவு செய்தார்.

சாதாரணமாக இருவரும் எங்கோ செல்வது போல, தர்ம புத்திரரை அழைத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணர் புறப்பட்டார். அப்போது பாதாள லோகத்தை மகாபலி அரசாண்டு வந்தான். மகாபலி ஈடு இணை சொல்ல இயலாத வகையில் மகத்தான அளவில் தான தர்மங்கள் செய்து வந்தான். அவனது விருந்தோம்பும் பண்பை உலகம் முழுவதிலுமுள்ள மக்கள் வியந்து பாராட்டினர்கள்.

ஸ்ரீகிருஷ்ணர் தர்மபுத்திரரைப் பாதாளலோகத்திற்கு அழைத்து வந்தார். இருவரும் மகாபலி அரசாண்டு வந்த தலைநகரிலுள்ள பல தெருக்களின் வழியாகச் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது தர்மபுத்திரருக்குத் தாகம் எடுத்தது. ஆகவே கண்ணனும் தர்மரும் எதிரே இருந்த ஒரு வீட்டுக்குச் சென்றார்கள். தர்ம புத்திரர் அந்த வீட்டில் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டார். அந்த வீட்டின் மாதரசி ஒரு தங்கக் கிண்ணத்தில் குடிநீர் கொண்டுவந்து தர்மபுத்திரருக்குக் கொடுத்தாள். கிருஷ்ண பரமாத்மா புன்னகையுடன் நடப்பதை எல்லாம் கவனித்துக்கொண்டிருந்தார்.

தர்மபுத்திரர் நீர் அருந்தியதும் அந்த வீட்டு மாதரசியிடம், "மிக்க நன்றி அம்மா. இது தங்கக் கிண்ணமாக இருக்கிறதே! இதைத் திரும்பவும் எடுத்துச் சென்று பத்திரமான ஓர் இடத்தில் வையுங்கள்" என்று சொல்லிக்கொண்டே கிண்ணத்தை நீட்டினர்.

அதற்குப் பதிலாக அந்தப் பெண்மணி, "ஐயா, ஒரு தடவை கொடுத்ததை, அது தங்க கிண்ணமானாலும் கூடத் திரும்பப் பெறும் வழக்கம் எங்கள் ராஜ்யத்தில் இல்லை. மேலும், ஒரு முறை உபயோகித்ததை, அது தங்கத்தால் செய்யப்பட்டிருப்பினும் வீசியெறிந்து விடுவோமே தவிர மீண்டும் பயன்படுத்தும் வழக்கமில்லை" என்று கூறினாள்.

அவள் சொன்னதைக் கேட்டவுடனே அந்த நாட்டு மக்களின் செல்வச் செழிப்பையும் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையும் புரிந்து கொண்ட தர்மபுத்திரர் மிகவும் வியப்படைந்தார்.

பிறகு அந்த வீட்டிலிருந்து கண்ணபிரானும் தர்மபுத்திரரும் புறப்பட்டு மகாபலியின் அரண்மனைக்குச் சென்றனர்.

அங்கு மகாபலியிடம், "அரசே, இன்றைய தினம் தர்மபுத்திரரைத் தங்கள் ராஜ்யத்திற்கு அழைத்து வந்திருக்கிறேன். இவர் தான தர்மங்கள் செய்வதில் மிகவும் புகழ்பெற்றவர். ஒவ்வொரு நாளும் இவர் ஐந்நூறு பேருக்கு அன்னதானம் செய்கிறார்" என்று கூறி, தர்மபுத்திரரை ஸ்ரீகிருஷ்ணர் அறிமுகப்படுத்தி வைத்தார்.

ஸ்ரீகிருஷ்ணர் சொன்னதை மகாபலி கேட்டாரோ இல்லையோ, உடனே அவர் தமது இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு, "வேண்டாம், வேண்டாம், என்னிடம் சொல்லாதீர்கள்! அப்படிப்பட்ட ஒருவரைப் பற்றி நான் கேட்டுக்கொண்டிருக்கத் தயாராக இல்லை. இங்கு என் ராஜ்யத்தில், என்னிடமிருந்து தானம் பெறுவதற்கு நான் எவ்வளவோ முயற்சி செய்தும் ஒரே ஒருவர்கூட கிடைக்கவில்லை. இங்கே தானம் பெற்று வாழவேண்டும் என்ற நிலையில் ஒருவர்கூட இல்லை. 'கொள்வாரிலாமையால் கொடுப்பாரில்லை.' நீங்களோ தர்மபுத்திரர் ஒவ்வொரு நாளும் ஐந்நூறு பேருக்கு அன்னதானம் செய்கிறார் என்று சொல்கிறீர்கள். அப்படியானால் அவரது ராஜ்யத்தில் ஐந்நூறு ஏழைகள் இருக்கிறார்கள் என்பது நிச்சயமாகிறது. அதிலிருந்தே அவர் எவ்வளவு 'அழகாக' அரசாட்சி செய்கிறார் என்பது தெரிகிறதே! அப்படிப்பட்ட ஒரு பாவியைப் பற்றித் தெரிந்துகொள்ள நான் ஒருசிறிதும் தயாராக இல்லை!" என்றார்.

மகாபலி சொன்னதைக் கேட்ட தர்மபுத்திரர் வெட்கத்தால் தலைகுனிந்தார்.

இவ்விதம் தர்மபுத்திரரின் உள்ளத்தில் கர்வம் பெரிதாக வளர்வதற்கு முன்பே, ஸ்ரீகிருஷ்ணர் அதை அறவே நீக்கி தர்மபுத்திரருக்கு அருள்புரிந்தார்.

# பீஷ்மரின் தியாகம்

'வால்மீகி'



## 1

சத்தியத்தையும் தர்மத்தையும் எந்த நெருக்கடியிலும் காக்க வேண்டும் என்பது பாரதத்தின் வழிவழியாக ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் கடைபிடிக்கப்பட்டு வந்த கொள்கை. கோரமான யுத்தம் நடைபெறும் போது கூடத் தர்மத்தைக் கை நழுவ விடாமல் இருந்த பீஷ்மரின் வரலாறு பாரதத்தின் புராதன தார்மிகப் பண்புகளுக்குச் சிறந்த உதாரணம்.

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் மூண்ட யுத்தத்தில் தருமம் பாண்டவர் பக்கம்தான் இருக்கிறது என்பது பீஷ்மருக்குத் தெரியும். சர்வேச்வரனை கண்ணன் பாண்டவர்களின் பக்கம் இருக்கும்பொழுது தருமமும் அங்கேதான் இருக்கும் என்பதைப் பீஷ்மர் அறியாமலில்லை. என்றாலும் அவர்களை எதிர்த்துப் போர்புரிய வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு உண்டாயிற்று. வாழ்நாள் முழுவதும் கௌரவர்களோடு இருந்த அவர், யுத்த நெருக்கடியில் அவர்களைக் கைவிட்டுப்போவது தர்மமாகாது. தமது சுதர்மத்தைக் காப்பதற்காகக் கௌரவர்களின் அதர்மத்துக்கு அவர் பக்க பலமாக இருக்க நேரிட்டது. பாண்டவர்கள் ஜயித்துத் தர்மம் தழைக்க வேண்டும் என்பதுதான் அவருடைய விருப்பம். என்றாலும் அதற்காகத் தமது சுதர்மத்தைக் கைவிடவோ அல்லது தமது பராக்கிரமத்தை மட்டுப்படுத்திக் கொண்டு பாண்டவர்களின் வெற்றிக்கு வழி வகுத்துக் கொடுக்கவோ அவர் தயாராக இல்லை.

பீஷ்மருக்கு ஒருபுறம் கௌரவர்களிடம் வெறுப்பும், பாண்டவர்களிடம் விருப்பும், மற்றொருபுறம் கௌரவர்களை ஜயிக்கச் செய்து, பாண்டவர்களைத் தோற்கச் செய்ய வேண்டிய மாபெரும் பொறுப்பும் இருந்தன. இத்தகைய நெருக்கடியான சூழலில் அவர் தர்மத்தைக் காக்க வேண்டியிருந்தது. பீஷ்மர் உயிரோடு உள்ள வரையில் தாங்கள் ஜயிக்க முடியாது என்பது பாண்டவர்களுக்குத் தெரியும். பீஷ்மரை ஜயிக்க முடியவுமில்லை. அதோடு பீஷ்மரை வீழ்த்துவதாக அர்ஜுனன் வேறு சத்தியம் செய்திருக்கிறான். அவனுடைய சத்தியம் பிழைக்க வேண்டுமானால் பீஷ்மர் வீழ்த்தப்பட வேண்டும். இதற்கு என்ன செய்வது?

இதற்குக் கண்ணன் ஒரு யோசனை சொல்லுகிறார். "அர்ஜுனா! நீ போய்ப் பீஷ்மரை வணங்கி உன்னுடைய சத்தியம் பிழைக்க ஒரு வழி சொல்ல வேண்டும் என்று கேள். சத்தியத்தைக் காப்பாற்ற அவர் எதுவும் செய்வார்!" என்று அர்ஜுனனுக்குச் சொல்லுகிறார் கண்ணன்.

அன்றைய போர் முடிந்ததும், அர்ஜுனன் ஆயுதங்களைக் கழற்றி வைத்துவிட்டு, எதிரிகளின் பாசறைக்குத் தனியாகப் போய், பீஷ்மரை வணங்குகிறான். இன்றைய உலகில் இம்மாதிரியான அதிசயத்தை நாம் காண முடியுமா? யுத்த காலத்தில் ஒரு தரப்புத் தளபதி இன்னொரு தரப்பின் பாசறைக்குப் போக முடியுமா? போனால் உயிரோடு திரும்பி வரத்தான் முடியுமா?

அர்ஜுனன் வந்து வணங்குவதைப் பார்த்த பீஷ்மர், அவனைத் தூக்கி நிறுத்தி, "குழந்தாய் அர்ஜுனா! நலமாக இருக்கிறாயா? உன் சகோதரர்கள் எல்லோரும் நலமா? என்னை நாடி வந்த காரணம் என்ன?" என்று விசாரித்தார்.

அதற்கு அர்ஜுனன், "தாத்தா! பாண்டவர்களாகிய எங்களுக்கு நீங்கள் தாத்தா மட்டுமல்ல, குருவும் தெய்வமும் ஆவீர். இருந்தும் க்ஷத்திரிய தர்மப்படி உங்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டே உங்களோடு யுத்தம் செய்ய நாங்கள் ஆரம்பித்தோம். உங்களுடைய பராக்கிரமத்தை மும்மூர்த்திகளும் அறிவார்கள். இந்திரனே வந்தால்கூட உங்களைப் போர்க்களத்தில் ஜயிக்க முடியாது. நீங்கள் உயிரோடு இருக்கும் வரையில் பாண்டவர்கள் ஜயிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. கௌரவர்கள் தோல்வி அடைவதற்குமில்லை. உங்களை வீழ்த்துவதாக நான் சத்தியம் செய்திருக்கிறேன். என் சத்தியம் பிழைக்க என்ன வழி? உங்களை வீழ்த்தும் வழி என்ன? அதைத் தாங்கள் சொல்லியருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

பீஷ்மர் ஒரு கணம் யோசித்தார். கண்ணனைத் தோழனாகக் கொண்ட அர்ஜுனனின் சத்தியம்பிழைக்க வேண்டும். பாண்டவர்கள் பக்கத்திலுள்ள தர்மம் வெல்ல வேண்டும். கௌரவர்கள் பக்கத்திலுள்ள அதர்மமும் அழிய வேண்டும். அதே சமயம் தமது சுதர்மத்துக்கும் பங்கம் ஏற்படக்கூடாது.

இவற்றை யோசித்து ஒரு முடிவுக்கு வந்த பீஷ்மர், "அர்ஜுனா! என் கையில் ஆயுதம் இருக்கும் வரையில் எவராலும் என்னை ஜயிக்க முடியாது. இந்தப் பூமியில் பிறந்த எல்லாருக்கும் மரணம் என்பது உண்டு. அதே போல எனக்கும் மரணம் உண்டு. என் மரணம் நெருங்கிக்கொண்டிருப்பதை நான் அறிவேன். அந்த மரணம் உன்னால் ஏற்பட்டு உன் சத்தியம் பிழைக்கட்டும். உங்கள் பக்கத்திலுள்ள தர்மமும் வாழட்டும். நான் ஜயிக்கப்பட வேண்டும் என்பதற்காக என் யுத்த முயற்சியைச் சிறிதும் தளர்வடையச் செய்ய மாட்டேன். எத்தனை பயங்கரமாகப் போர் செய்ய முடியுமோ அத்தனை பயங்கரமாக நான் போராடத்தான் செய்வேன். உங்கள் பக்கத்தில் எத்தனை ஆயிரம் பேர்களைக் கொன்று குவிக்க முடியுமோ அத்தனை ஆயிரம் பேர்களைக் கொன்று குவிக்கத்தான் செய்வேன். பெண்கள் அல்லது பெண்தன்மையுடையவர்களை எதிர்த்துப் போராடுவதில்லையென்று நான் பிரதிக்ஞை செய்திருக்கிறேன். உங்கள் படையில் சிகண்டி என்ற சிற்றரசன் இருக்கிறான். அவன் பெண்ணாகப் பிறந்து ஆணாக மாறியவன். பிறவியில் அவன் பெண் என்பதும் பெண்தன்மையுடன் இருப்பவன் என்பதும் எனக்குத் தெரியும். என்னை அழிப்பதற்காகவே அவன் பிறந்தவன். உன் தேரில் அவனை முன்னால் வைத்துக்கொண்டு யுத்தம் செய். என்னை அவன் தாக்க ஆரம்பித்தால் உடனே நான் ஆயுதத்தைக் கீழே வைத்துவிடுவேன். பெண் தன்மையுடைய அவனோடு நான் யுத்தம் செய்யமாட்டேன். என் கையில் ஆயுதம் இல்லாத அந்தச் சமயம் பார்த்து என்னைக் கடுமையாகத் தாக்கு. அந்தக் கடுமையான தாக்குதல் என்னை வீழ்த்திவிடும். இதைத் தவிர என்னை ஜயிக்க வேறு வழி இல்லை!" என்று கூறினார்.

இப்படிப் பீஷ்மர் தம்மை வீழ்த்தத் தமது எதிரிக்கே யோசனை சொல்லி அனுப்புகிறார். அதுபோல, சிகண்டியை ரதத்தில் வைத்துக்கொண்டு, அர்ஜுனன் யுத்தத்தை ஆரம்பிக்க, பீஷ்மர் ஆயுதத்தை எறிந்துவிடுகிறார். அந்தச் சமயம் பார்த்து அர்ஜுனன் கடுமையான தாக்குதல் நடத்தி, பீஷ்மரைக் காயப்படுத்தி வீழ்த்துகிறான். இந்த யுத்ததர்மம் எங்கே? இன்றைய அணுக்குண்டு சகாப்த யுத்ததர்மம் எங்கே?

மூவுலகிலும் எவராலும் ஜயிக்கமுடியாத பீஷ்மர் கேவலம் ஒரு சிற்றரசனான சிகண்டியை முன்னிட்டு மரணத்தைத் தழுவுவானேன்? பீஷ்மரின் பெருமையையும் வாய்மையையும் விளக்கும் ஒரு வரலாறு இதிலும் அடங்கியிருக்கிறது.

கௌரவ பாண்டவ வம்சத்தின் முன்னோர்களில் ஒருவனான சந்தனு மன்னனுக்கும் கங்காதேவிக்கும் பிறந்தவர் பீஷ்மர். அவருடைய குழந்தைப்பருவப் பெயர் தேவவிரதன். ஒரு நாள் சந்தனு மன்னன் யமுனை நதிக்கரையில் நீராடச் சென்றபொழுது திடீரென்று நறுமணம் வீசுவதை உணர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தான். அங்கே தெய்விகக் களை பொருந்திய ஒரு செம்படவப் பெண்ணைப் பார்த்து அவள் யார் என்று விசாரித்தான்.

''நான் செம்படவப் பெண். பெயர் சத்தியவதி. என் தந்தை செம்படவர்களின் அரசன். அவர் கட்டளைப்படி யமுனையில் படகு வலித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள் அந்தப் பெண்.

சந்தனு அவளுடைய தந்தையை அணுகித் தான் யார் என்பதைத் தெரிவித்துக் கொண்டான். பிறகு, ''என் முதல் மனைவி கங்காதேவி என்னை விட்டுப் போய் விட்டாள். ராஜ்யத்துக்கு இப்பொழுது ராணி இல்லை. உன் மகளை எனக்குத் திரு மணம் செய்து கொடுக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டான்.

சக்கரவர்த்தியான சந்தனுவுக்கு ஒரு சிற்றரசன், அதிலும் ஓடக்காரச் சிற்றரசன் தன் மகளைக் கொடுக்க விரும்புவானா? முதலில் அந்தஸ்து வேற்றுமையைச் சுட்டிக் காட்டி முடியவே முடியாது என்று மறுத்தான். சந்தனு மிகவும் வற்புறுத்தவே, ''ஒரு நிபந் தனையின் மீது என் பெண்ணைக் கொடுக்கச் சம்மதிக்கிறேன். உங்களுக்குப் பிறகு நாட்டை ஆளும் உரிமை என் மகள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்கு இருக்க வேண்டும்'' என்றான் செம்படவச் சிற்றரசன்.

கங்காதேவிக்குப் பிறந்த தெய்வாம்சம் பொருந்திய மூத்த பிள்ளை தேவவிரதன் இருக்கும்பொழுது செம்படவச் சிற்றரசனின் நிபந்தனைக்குச் சந்தனு எவ்வாறு சம்மதம் தெரிவிப்பான்? பதில் சொல்ல வழியில்லா மல் அவன் அத்தினபுரத்துக்குத் திரும்பினான்.

ஆயினும் சத்தியவதியின் நினைப்பு அவன் நெஞ்சை விட்டு அகலவில்லை. அல்லும் பகலும் அவளை நினைத்து உருகி உடல் மெலிந்தான் சந்தனு.

தந்தையின் மனக்கவலைக்குக் காரணத்தை ரகசியமாக விசாரித்து அறிந்த தேவவிரதன் யமுனா நதிக்கு வேகமாக விரைந்து செம்படச் சிற்றரசனைச் சந்தித்தான். போகும்பொழுது தர்மம் தெரிந்த பெரியோர் சிலரையும் தேவவிரதன் அழைத்துச் சென்றிருந்தான்.

செம்படவச் சிற்றரசனிடம் தேவவிரதன் சொன்னான்— ''அன்பரே! என் அருமைத் தந்தை தங்கள் மகளிடம் நாட்டம் கொண் டிருக்கிறார். தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைப்பதைவிடச் சிறந்த தருமம் வேறு எதுவுமில்லை. நான் சொல்லப் போவதை நீங்களும் என்னுடன் வந்திருக்கும் பெரியோர்களும் சூரிய சந்திரர்களும் அஷ்ட திக்குகளும் கேட்பீர்களாக. என் தந்தைக் கும் உங்கள் மகள் சத்தியவதி அம்மை யாருக்கும் பிறக்கும் பிள்ளையும், அவனுடைய சந்ததியார்களுமே இந்த ராஜ்யத்தை ஆளும் உரிமையுடையவர்களாக இருப்பார்கள்; அரசு உரிமையை இந்த விநாடி முதல் துறந்து விட்டேன். என்றாலும் என் சந்ததியார் எனக்குப் பிறகு அரசுரிமைக்குத் தகராறு ஏதாவது செய்வார்களோ என்று நீங்கள் யோசிக்கக்கூடும். ஆகவே நான் எடுத்துக் கொள்ளும் இன்னொரு சத்திய விரதத்தையும் கவனமாகக் கேட்டுக்கொள்ளுங்கள். நான் பூரணப் பிரம்மசரிய விரதம் பூண்டு, திரு மணம் இல்லாமலே என் வாழ்நாள் முழு வதையும் கழிப்பேன் என்று சத்தியம் செய் கிறேன். என் உடலில் உயிர் ஒட்டிக் கொண் டிருக்கும் வரையில் இந்தச் சத்தியத்தை நான் காப்பேன். பிறந்ததிலிருந்து இது வரை நான் பொய் சொன்னதில்லை என்பதை என்னுடன் வந்திருக்கும் பெரியோர்கள் அறிவார்கள். செம்படவர் தலைவரே! நான் எடுத்துக் கொண்டிருக்கும் இந்தச் சபதத்தில் நம்பிக்கை வைத்து உமது புதல்வியை என் தந்தைக்கு மனைவியாகக் கொடுக்க வேண் டும்.''

தேவவிரதன் எடுத்துக்கொண்ட இந்த ஒப்பற்ற உறுதிமொழியைக் கேட்ட செம் படவர் தலைவர் புளகாங்கிதமடைந்து போனான். தேவர்களும் ரிஷிகளும் மலர்மழை பொழிந்து, ''பீஷ்மன்! பீஷ்மன்!'' என்று சொல்லி, தேவவிரதனைப் பாராட்டினார்கள். அன்று முதல் தேவவிரதனுக்குப் பீஷ்மன் என்ற பெயர் உண்டாயிற்று. பீஷ்மன் என்றால் செயற்கரிய காரியத்தைச் செய் தவன், எவரும் மேற்கொண்டிராத சத்திய விரதத்தை மேற்கொண்டவன் என்பது பொருள்.

தந்தையின் சந்தோஷத்துக்காகத் தமது சொந்த வாழ்க்கையையே பணயம் வைத்த பீஷ்மருக்கு ஒப்பார் இந்த வையகத்தில் வேறு யார்?

தன் மகளைக் கொடுக்கச் செம்படவர் தலை வன் சம்மதிக்கவே, பீஷ்மர் சத்தியவதியை வணங்கி, ''தாயே! வந்து தேரில் ஏறிக்

கொள்ளுங்கள்! தங்கள் அரண்மனைக்குப் போவோம்'' என்று சொல்லி, சத்தியவதியை அவருடைய தந்தையுடனும் பெரியோர்களுடனும் அரண்மனைக்கு அழைத்து வந்தார் பீஷ்மர்.

பீஷ்மர் சத்தியவதியை அழைத்துக் கொண்டு அத்தினபுரத்துக்கு வந்து சேரவும், அவர் எடுத்துக்கொண்ட கடுமையான சபதத்தைக் கேட்டுச் சந்தனு மன்னன் அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தான்.

"குழந்தாய் பீஷ்மா! உன்னைப் போன்ற உத்தமன் இந்த உலகத்தில் பிறந்ததில்லை; இனிப் பிறக்கப் போவதுமில்லை. தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக உன் எதிர்கால இன்ப வாழ்க்கையையே நீ துறந்திருக்கிறாய். இதற்குப் பதிலாக உனக்கு நான் ஒரு வரம் கொடுக்கிறேன். நீயாக விரும்பும் நேரத்தில் நீ மரணமடைவாய். உன் விருப்பத்துக்கு மாறாக மரணம் உன்னை நெருங்காது. இதுவரை நான் செய்த பல அசுவமேத யாகங்களின் பலனையும் பூஜைகளின் பலனையும் கொண்டு உனக்கு இந்த வரம் அளிக்கிறேன்'' என்றான் சந்தனு மன்னன்.

3

இதன் பிறகு சந்தனு மன்னன் பல ஆண்டுகள் சத்தியவதியுடன் இல்லறம் நடத்தினான். அவர்களுக்குச் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். சந்தனு மன்னன் காலமானதும் பீஷ்மர் தமது சிற்றன்னையின் விருப்பம் அறிந்து, சித்திராங்கதனுக்கு முடிசூட்டி அவன் சார்பாக ராஜ்யப் பொறுப்பை தாமே நடத்தி வந்தார். ஒரு சமயம் சித்திராங்கதன் அதே பெயருடைய ஒரு கந்தர்வராஜனால் யுத்தத்தில் கொல்லப்படவே, சித்திராங்கதன் தம்பியான விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகம் செய்தார் பீஷ்மர்.

விசித்திரவீரியன் காளைப் பருவமடைந்ததும் அவனுக்குத் திருமணம் செய்து வைப்பதைப்பற்றிச் சிற்றன்னை சத்தியவதியுடன் கலந்து யோசித்தார் பீஷ்மர். இந்தச் சமயத்தில் காசிராஜனுடைய புதல்வியர் மூவருக்குச் சுயம்வரம் நடக்கும் செய்தி வரவே, சிற்றன்னையின் அனுமதியோடு பீஷ்மர் அந்தச் சுயம்வரத்துக்குச் சென்றார்.

சுயம்வரத்துக்கு வந்திருந்த பலநாட்டு மன்னர்களும் பீஷ்மரைப் பார்த்து, "இந்தக் கிழவருக்குச் சுயம்வரத்தில் என்ன வேலை? பிரம்மசாரியாகவே வாழ்வேன் என்று ஒரு சமயம் சூளுரைத்த கிழவர் இன்று குமரிப் பெண்களுக்கு மாலையிட வந்திருக்கிறாரே!'' என்று கேலி செய்தார்கள். அதைக் கேட்டுச் சினமுற்ற பீஷ்மர், "அப்படியா? எட்டுவகையான மணங்களிலே எட்டாவதான இராட்சத மணமுறையைத் தழுவி, அரசகுமாரிகள் மூவரையும் நான் கடத்திச் செல்லப் போகிறேன். வீரமுள்ளவர்கள் என்னை எதிர்த்து நிற்கட்டும்!'' என்று இடிமுழக்கம் போல முழங்கிவிட்டு, மூன்று அரசிளங்குமரிகளையும் தமது தேரில் தூக்கி வைத்துக்கொண்டு கிளம்பினார். அவரை ஒன்றுப்பட்டுத் தாக்க முயன்ற மன்னர்கள் படுகாயமுற்றுப் பின்வாங்கி ஓடினார்கள். கன்னியர் மூவருடனும் அத்தினபுரம் திரும்பிய பீஷ்மர் அவர்களை விசித்திரவீரியனுக்கு மணமுடிக்க ஏற்பாடுகள் செய்யலானார்.

அப்பொழுது மூன்று கன்னியரில் மூத்தவளான அம்பை, பீஷ்மரை வணங்கி, "தருமம் தெரிந்தவரே! என் மனம் சாலுவ மன்னரை நாடுகிறது. சுயம்வரத்தில் அவரையே கணவனாக வரிக்க நான் நிச்சயித்திருந்தேன். ஆகையால் என்னை அவரிடம் அனுப்பிவிட வேண்டும்'' என்று வேண்டினாள்.

அவள் இப்படி மனம்விட்டுச் சொல்லவே அவளைச் சுதந்திரமாகப் போக விட்டுவிட்டார் பீஷ்மர். அம்பை தன் காதலனான சாலுவ மன்னனை அடைந்தபொழுது, அவன் அவளை ஏற்க மறுத்துவிட்டான். "நீ பிறரால் தூக்கிச் செல்லப்பட்டதனால் அசுத்தமடைந்தவள். உன்னை ஏற்க மாட்டேன்'' என்று கூறி, அம்பையை அவன் விரட்டிவிட்டான். அவள் திரும்பவும் பீஷ்மரிடம் வந்து, "பலர் பார்த்திருக்க என்னைத் தூக்கி வந்த நீங்களே அரசதருமப்படி என்னை மணந்துகொள்ள வேண்டும்'' என்று வற்புறுத்தினாள். ஆனால் பீஷ்மரோ தான் நித்தியப் பிரம்மசாரி என்றும், ஆகவே இல்வாழ்க்கையில் ஈடுபடமுடியாது என்றும் சொல்லி மறுத்துவிட்டார்.

இப்படிச் சாலுவ மன்னனிடமும் பீஷ்மரிடமுமாகப் பல தடவை திரும்பத் திரும்பப் போய் முறையிட்டுப் பார்த்த அம்பைக்கு

மனம் வெறுத்துப்போயிற்று. தன்னை இந்தக் கதிக்கு உள்ளாக்கிய பீஷ்மரைக் கொல்ல வேண்டும் என்ற வைராக்கியம் ஏற்பட்டது. வழி தேடுவதற்காக அவள் காட்டுக்குச் சென்றாள்.

4

அம்பை இமய மலைச் சாரலில் பகூதா நதிக் கரையில் அமர்ந்து ஐம்புலன்களை அடக்கிக் கடுமையாகத் தவமியற்றினாள். அவளிடம் இரங்கிய ஆறுமுகக் கடவுள் அவளுக்குக் காட்சிக்கொடுத்து, ''பெண்ணே! உன் விருப்பத்தை நான் அறிவேன். இந்தா, இந்தத் தேவலோகத் தாமரை மலர்மாலையைப் பெற்றுக்கொள். இந்த மாலையை எவன் அணிந்து கொள்வானோ அவனே பீஷ்மருக்குக் கூற்றுவன் ஆவான்'' என்று சொல்லி மறைந்தார்.

மாலையைப் பெற்றுக்கொண்ட அம்பை, அடுத்த ஐந்தாண்டுகள் வரை பல அரசர்களையும் சந்தித்து, அந்த மாலையை அணிந்து, பீஷ்மரைக் கொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். பீஷ்மரின் பேராற்றலை நன்கு அறிந்திருந்த அரசர் எவரும் அம்பையின் வேண்டுகோளை ஏற்கத் தயாராக இல்லை. பின்பு பாஞ்சால நாட்டை அடைந்து மகாவீரனை துருபத மன்னனிடம் அவள் மன்றாடிப் பார்த்தாள். துருபத மன்னனும் மறுத்துவிடவே, விரக்தியடைந்து அந்தத் தாமரை மலர்மாலையை அரண்மனை வாசலிலேயே ஒரு மூலையில் தொங்கவிட்டுப் போய்விட்டாள்.

திரும்பவும் அவள் அகோரமாகத் தவமியற்றினாள். இம்முறை சிவபெருமான் அவளுக்குக் காட்சிகொடுத்து, ''அம்பை! உன் இஷ்டம் இந்த ஜன்மத்தில் நிறைவேறாது. உனது அடுத்த ஜன்மத்தில் உன்னாலேயே பீஷ்மனுக்கு மரணம் நேரும்'' என்று சொல்லி மறைந்தார்.

அதன் பின் அம்பை, தற்போதைய ஜன்மத்தை விரையில் முடித்துக்கொள்ள அக்கினிப் பிரவேசம் செய்து உயிரை விட்டாள். அவளே துருபத மன்னனுக்கு மகளாகப் பிறந்தாள். சிகண்டினி என்று பெயரிட்டு அந்தக் குழந்தையை அருமையாக வளர்த்தான் துருபத மன்னன். ஒரு நாள் சிகண்டினி வேடிக்கையாக அரண்மனை வாசலின் ஒரு மூலையில் தொங்கிய தாமரை மலர் மாலையை எடுத்து அணிந்துகொண்டாள். அதைக் கண்டுவிட்ட துருபத மன்னன் துணுக்குற்றுச் சிகண்டினியை காட்டுக்கு விரட்டிவிட்டான். இப்படிக் காட்டுக்கு விரட்டப்பட்ட சிகண்டினி கங்கா நதி உற்பத்தியாகும் இடத்தில் வடிவழகனான கந்தர்வ ராஜன் ஒருவனுக்குப் பணிவிடை செய்தாள். பெண்ணாக வாழவேண்டும் என்று விரும்பிய அந்தக் கந்தர்வன் தனது ஆண்வடிவத்தைச் சிகண்டினிக்குக் கொடுத்து அவளுடைய பெண்வடிவத்தைத் தான் பெற்றுக் கொண்டான்.

சிகண்டினியாக இருந்தவள் சிகண்டி என்ற ஆண் பெயருடன் அஸ்திரப் பயிற்சி பெற்றுத் தேர்ச்சியடைந்து தந்தையிடம் திரும்பினாள். ''தந்தையே! இனிப் பீஷ்மருக்கு நீங்கள் அஞ்சத் தேவையில்லை. பீஷ்மரைக் கொல்லவே அவருடைய கூற்றுவனாக நான் பிறந்திருக்கிறேன்'' என்றான் சிகண்டி. அவன் ஆண் உருவில் இருந்தபொழுதிலும் பெண்ணாகப் பிறந்தவன்; பெண் தன்மையுடையவன். ஆகையால்தான் அர்ஜுனன் தேரில் அர்ஜுனனுக்கு முன்பாக அவன் அமர்ந்திருந்த காரணத்தினால் பீஷ்மர் ஆயுதங்களை எறிந்துவிட்டுச் செயலற்றிருந்தார். அந்தச் சமயம் பார்த்து, அவர் சொன்னதைப் போலவே, அவரைக் கடுமையாக அர்ஜுனன் தாக்கிப் படுகாயப்படுத்தி வீழ்த்தினான்.

அதர்மத்தின் பக்கம் பீஷ்மர் போர் செய்ய நேரிட்டது. தாம் அழிந்தாலன்றி அதர்மம் அழியாது என்பதை அறிந்த தர்மாத்மாவான பீஷ்மர், தர்மம் வெற்றி பெறுவதற்காகத் தம்மை அழித்துக்கொள்ளச் சம்மதித்தார். சுயம்வரத்தில் அம்பையை வென்றெடுத்துக் கொண்டு வந்தவர் பீஷ்மர். ஆகவே, க்ஷத்திரிய தர்மத்தின்படி, அவரே அம்பையை மணந்து கொண்டிருக்க வேண்டும். சத்தியவதிக்குக் கொடுத்த சத்தியத்தைக் காப்பதற்காக அம்பைக்கு அவர் அதர்மம் செய்ய நேரிட்டது. அவள் மூலமாகவே தான் அழிவதுதான் பிராயச்சித்தம் என்று நினைத்துச் சிகண்டி காரணமாக வாழ்வை முடித்துக்கொள்ளப் பீஷ்மர் சம்மதித்தார்.

கங்காதேவி அளித்த வரத்தின்படி அவர் விரும்பியிருந்தால் சிரஞ்சீவியாக இருந்திருக்கலாம். மனிதனாகப் பிறந்தவன் என்றாவது ஒரு நாள் சாக வேண்டும் என்ற நியதியை மதித்துத் தான் செய்த தர்மவிரோதமான காரியத்துக்குப் பிராயச்சித்தம் செய்யவும், அதர்மம் அழிந்து தர்மம் பிழைக்கவும் தம்மையே தியாகம் செய்துகொண்டார் உத்தமரான பீஷ்மர். ஆகையால்தான் மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்துக்கு எப்பொழுதுமே ஒரு தனி மதிப்பு உண்டு. மரணப் படுக்கையில் இருந்துகொண்டே அவர் உபதேசித்த ராஜநீதி மகாபாரதத்துக்கு ஒப்பற்ற சிகரம் போன்றது. கண்ணன் திருமாலின் அவதாரம் என்ற உண்மையை எல்லோருக்கும் உணர்த்தி விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தை இயற்றிய பெருமையும் பீஷ்மருடையதேயாகும்.

❋

# வேதாந்த முழக்கம்

'அண்ணு' சுப்ரமண்யம்



'வேதாந்த டிண்டிம:' என்ற சம்ஸ்கிருத நூல் 94 சுலோகங்களைக் கொண்டது. வேதாந்தக் கருத்துக்களைக் கொண்ட இந்த நூல் பழமையானது. ஆனால் இதன் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை. 'வேதாந்த டிண்டிம:' நூலின் கருத்துக்களை 'அண்ணு சுப்ரமண்யம்' அவர்கள் இங்கே தமிழாக்கம் செய்து தருகிருர். எண்கள் சுலோக எண்களைக் குறிப்பிடுகின்றன. தேவைப்படும் சுலோகங்களுக்கு 'அண்ணு' எழுதிய குறிப்பு, அடைப்புக்குள் சுலோகத்தின் முடிவில் தரப்பட்டிருக்கிறது.

1. வேதாந்த முழக்கங்கள் ஒன்றேயாகிய எந்தத் தத்துவத்தை உரக்கப் பறைசாற்றுகின்றனவோ, அந்தத் தத்துவ ஒளியே உருக்கொண்ட தட்சிணமூர்த்தி என்ற பெயர் கொண்ட வடிவம் நம் எதிரில் இருந்து அருள் புரியட்டும்

[இந்த முதல் சுலோகம் நூலுக்கு மங்களாசரணமாக அமைகிறது ]

பதார்த்தங்கள் இரண்டு

2. ஆத்மா, ஆத்மா அல்லாதது என்று பொருள்கள் (பதார்த்தங்கள்) இரண்டு இருக்கின்றன. அவை அனுபவிப்பவன், அனுபவிக்கப்படுவது என்ற வடிவங்கள் கொண்டவை. பிரம்மமே ஆத்மா,உடல் முதலியவை ஆத்மா அன்று என்று வேதாந்தம் முழங்குகிறது.

[இதுவே 'த்ருக்--த்ருச்ய விவேகம்' என்றும் 'க்ஷேத்ர--க்ஷேத்ரஜ்ஞ--விவேகம்' என்றும் சொல்லப்படுகிறது.]

3. ஞானம், அஞ்ஞானம் என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன இவை ஜீவாத்மாவிற்கு பந்தத்தையும் முக்தியையும் அளிப்பவை இவற்றுள் ஞானத்திலிருந்து முக்தியும் அஞ்ஞானத்திலிருந்து கடுமையான பந்தமும் ஏற்படுகின்றன என்று வேதாந்தம் முழங்குகிறது.

4. அறிபவன், அறியப்படுவது என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன. இவை பிரகாசத்தை அளிப்பது, பிரகாசத்தைப் பெறுவது என்ற வடிவம் கொண்டவை. அறிபவன் பிரம்மம் என்றும், தோன்றி மறையும் உலகம் அறியப்படுவது என்றும் வேதாந்தம் முழங்குகிறது.

5. இன்பம், துன்பம் என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன. அவை விருப்பையும் வெறுப்பையும் விளைவிப்பவை. இன்பம் என்பது பிரம்மம், துன்பம் என்பது உலகம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

6. அனைத்தையும் தன்னுள் கொண்ட வடிவம், பிரிதாகித் தனித்து நிற்கும் வடிவம் என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன. இவை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்டவை ஆகும். அனைத்தையும் தன்னுள் கொண்டது ஈசுவர வடிவம் என்றும், தனித்து நிற்பது ஜீவ வடிவம் என்றும் வேதாந்தம் முழங்குகிறது.

7. ஞானம், கர்மம் என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன. அவை 'வஸ்து தந்த்ரகம்' என்றும், 'கர்த்ரு--ஆத்ம தந்த்ரகம்' என்றும் சொல்லப்படுகின்றன. அவற்றுள் ஞானத்தால் முக்தி கிட்டுமே

தவிர, கர்மங்களால் முக்தி கிட்டாது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[வஸ்து தந்த்ரகம் – உள்ளது உள்ள படியே இருப்பது; எவர் செய்யும் கருமத் திற்கும் வசப்படாதது. அது ஞானம்.

கர்த்ரு – ஆத்ம தந்த்ரகம் – செயல் புரிவ னுக்கு வசப்பட்டது. அது கர்மம்.]

8. கேட்கத் தக்கது, கேட்கத் தகாதது என்ற வடிவங்களையுடைய இரண்டு பொருள் கள் இருக்கின்றன. அவை முறையே இன் பத்தையும் துன்பத்தையும் தருபவை ஆகும். கேட்கத் தக்கது பிரம்மம். மற்றது கேட்கத் தகாதது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ஒப்பிடுக: "தச்சிந்தனம் தத்கதனம் அன் யோன்யம் தத்ப்ர போதனம் | ஏததேகபரத் வஞ்ச ப்ரஹ்மாப்ப்யாஸம் விதுர்புதா : ॥

அதையே நினைப்பது, அதையே பேசுவது, ஒருவருக்கு ஒருவர் அதையே அறிவுறுத்து வது என்ற ஒன்றிலேயே ஈடுபாடுதான் – பிரம்ம அப்பியாசம் என்று ஞானிகள் அறிகிறார்கள்." – வேதாந்த பஞ்சதசீ 7–108.]

9. நினைக்கத் தகுந்தது, நினைக்கத் தகாதது என்று இரண்டு பொருள்கள் இருக் கின்றன. அவை முறையே துன்பத்தை நீக்குவதாகவும் துன்பத்தைத் தருவதாகவும் இருக்கின்றன. நினைக்கத் தகுந்தது பரப் பிரம்மம் என்றும், மற்றொன்று நினைக்கத் தகாது என்றும் வேதாந்தம் முழங்குகிறது.

10. தியானம் செய்யத் தகுந்தது, தியானம் செய்யத் தகாதது என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று புத்தியின் சமாதியையும், மற்றொன்று புத்தியின் விக்ஷேபத்தையும் உண்டுபண்ணு கின்றன. தியானிக்க வேண்டியது பிரம்மம் என்றும், மற்றொன்று தியானிக்கத் தகாதது என்றும் வேதாந்தம் முழங்குகிறது.

[புத்தியின் விகல்பங்களும் திரிசலும் ஒழிந்த நிலை சமாதி எனப்படும். அதற்கு எதிரிடையாக விகல்பங்களும் திரிசலும் உள்ள நிலை அசமாதி அல்லது விக்ஷேபம் எனப்படும்.]

ஞானமின்றி முக்தி இல்லை

11. யோகிகள் ஆயினும், போகிகள் ஆயினும், பற்றைத் துறந்தவர்கள் ஆயினும், பற்றுடையவர்கள் ஆயினும், ஞானத்தால் தான் முக்தி கிட்டும். இதில் சந்தேகமே இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

12. பிரம்மஞானம் இல்லாமல் முக்தி கிட்டாது. வர்ணாசிரம ஏற்பாடுகளால் முக்தி இல்லை; கர்மங்களைச் செய்வதனாலும் உபா சனைகளைச் செய்வதனாலும் முக்தி இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

13. பிறவிச் சூழல் முழுவதும் உண்மை யில் இல்லாதது ; அது ருசி உள்ளதைப் போன்ற வெறும் தோற்றம் என்ற குற்றத்தைக் கொண்டிருக்கிறது. அது விலக்கத் தக்கது, பிரம்மம் அறியத் தக்கது என்று வேதாந்தம் முழங்குகிறது.

14. வீணான செயல்களையும், வீணான பேச்சுக்களையும், வீணான மனக்கோட்டை களையும் விட்டொழித்து, ஒன்றேயாகிய பிரம்மத்தையே அறிய வேண்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

ஜீவ பிரம்ம ஐக்கியம்

15. ஜீவன் பிரம்மமே வடிவாக நிலை பெற்றுள்ளது ; பிரம்மம் ஜீவ வடிவாக நிலை பெற்றுள்ளது — இந்த உண்மையை நன்கு காண்பவர்களுக்கு முக்தி என்று வேதாந்தம் முழங்குகிறது.

16. ஜீவன் பிரம்ம வடிவாக அறியத் தக்கது ; பரப்பிரம்மம் ஜீவ வடிவாக அறியத் தக்கது. முக்தி என்பது ஜீவன், பிரம்மம் ஆகியவற்றின் ஒற்றுமை உணர்வு (தத் ஐக்ய விஜ்ஞானம்) என்று வேதாந்தம் முழங்கு கிறது.

17. எல்லா வகையிலும் பரப்பிரம்மம் கேட்பவனுடைய ஆத்மாவாகவே நிலை பெற்றுள்ளது. உண்மையை அறிவதில் ஒரு கஷ்டமும் இல்லை என்று வேதாந்தம் முழங்கு கிறது.

### ஞானமின்றிக் கருமம் வீண்

18. இந்த உலகத்தைப் பற்றியதும், பர உலகத்தைப் பற்றியதுமான கர்மத் தொகுதி துன்பத்தை முடிவாகக் கொண்டது. அவற்றை விட்டு, பிரம்மம் மட்டுமே அறியத் தக்கது என்று வேதாந்தம் முழங்குகிறது.

19. அத்வைதம், த்வைதம் என்ற இரண்டு வாதங்களும் (கருத்துக்களும்) முறையே சூட்சுமம், ஸ்தூலம் என்ற இரண்டு நிலைகளைப் பற்றியவை ஆகும். அத்வைத வாதத்தினால் முக்தி இருக்கிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

20. கர்மத்தைக் கைக்கொண்டவர்கள் மீண்டும் மீண்டும் பிறக்கிறார்கள்; உபாசனை களைக் கைக்கொண்டவர்களும் மீண்டும் பிறக்கிறார்கள். ஞானிகள் மீண்டும் பிறப்ப தில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

21. கர்மமானது நேரில் காணப் படாததும் நிலையற்றதுமான பலனைத் தருவ தாகும். ஞானமானது நேரில் கண்டு அனு பவிக்கப்படுவதும் நிலையானதுமான பலனைத் தருகிறது. ஆகவே ஞானத்தையே பழக வேண்டும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

### கருமத்தால் சித்தசுத்தி — ஞானத்தால் மோட்சம்

22. பிரம்மஞானம் அடையப்படா விட்டால் அறிவாளிகளின் (ஞானகாண் டத்தைச் சேர்ந்த) இந்த உழைப்பும் வீண்; கர்மங்களைக் கைக்கொண்டவர்களின் (கர்ம காண்டத்தைச் சேர்ந்த) இந்த உழைப்பும் வீண் என்று வேதாந்தம் முழங்குகிறது.

23. பரப்பிரம்மத்தை அறிந்துகொண்ட பிறகு யாகங்களால் பயனில்லை, யோகங் களால் பயனில்லை, போகங்களால் பய னில்லை, செல்வங்களால் பயனில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

24. பரமாத்மாவை அறிந்துகொண்ட பிறகு வேதங்களால் பயனில்லை, சாஸ்திரங் களால் பயனில்லை, ஸ்ம்ருதிகளாலும் புரா ணங்களாலும் பயனில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

25. பிரம்மஞானமும் ஆத்மஞானமும் அறியபட்டபின் ரிக்வேதத்தால் பயன் இல்லை, யஜுர்வேதத்தாலும் பயன் இல்லை, ஸாமவேதத்தினாலும் எந்தவிதப்பயனுமில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

26. கர்மங்கள் மனதின் தூய்மைக்காக; உபாசனை மனதின் ஒருமைப்பாட்டிற்காக; பிரம்மஞானம் மோட்சத்திற்காக என்று வேதாந்தம் முழங்குகிறது.

27. முற்பிறவிகளில் செய்து குவிந் திருக்கும் (ஸஞ்சித) கர்மங்களும், வாசனை களின் பயனாக இனி வரக்கூடிய (ஆகாமி) கர்மங்களும், ஞானத்தின் செயலால் எரிக்கப் படுகின்றன. இந்தப் பிறவிக்குக் காரண மாகிப் பயனைக் கொடுக்க ஆரம்பித்திருக்கும் (பிராரப்த) கர்மங்கள் அனுபவிக்கப்பட்ட பிறகு மோட்சம் என்று வேதாந்தம் முழங்கு கிறது.

28. என்றும் பற்றற்ற ஆத்மநிஷ்டை கூடியவர்களுக்குப் புண்ணிய செயல்களால் ஏற்றமும் இல்லை, பாவச் செயல்களால் இழிவும் இல்லை என்று வேதாந்தம் முழங்கு கிறது.

### த்ருக் த்ருச்ய விவேகம்

29. பார்ப்பது, பார்க்கப்படுவது என்ற இரண்டு பொருள்களும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட இயல்புடையவையாக இருக் கின்றன. அவற்றுள் பார்ப்பது பிரம்மம், பார்க்கப்படுவது மாயை என்று வேதாந்தம் முழங்குகிறது.

30. அவித்யையை உபாதியாக உடை யவன் ஜீவன்; மாயையை உபாதியாக உடையவன் ஈசுவரன்; மாயை, அவித்யை ஆகியவற்றின் குணங்களைக் கடந்து நிற் பவன் ஞானி என்று வேதாந்தம் முழங்கு கிறது. (தொடரும்)



மனம், முத்து, கண்ணாடி இவை உடைந்தால்
ஒட்ட முடியாது. பிரேமை, பகைமை,
மதம், கஸ்தூரி, விருந்தாளி
இவர்களை மறைக்க
முடியாது.

— கபீர்தாசர்

# திருநீற்றின் பெருமை



உலகெங்கும் நிறைந்து, எல்லாம் உணர்ந்து, எல்லாம் செய்யவல்ல சிவபெருமானின் அடியவர்கள் சிவசின்னமாக விபூதியும் ருத்திராட்சமும் தரிக்கிறுர்கள்.

முக்தியைத் தரவல்ல திருநீற்றின் பெருமைகளை ரிக், யசுர், சாமம், அதர்வம் என்ற நான்கு வேதங்களும், அவற்றின் பாகங்களாகிய உபநிஷதங்களும் ஆங்காங்கு எடுத்துக் கூறுவதன்றி, ருத்திராட்ச ஜாபால உபநிஷதமும் விபூதியின் பெருமைகளையும் சிறப்பையும் மிகத் தெளிவுற உரைக்கிறது.

பிரளய வெள்ளத்தை நீராகவும், அண்டங்கள் அனைத்தையும் மண்டபங்களாகவும், இப்பூவுலகை வேதிகையாகவும், அரி, பிரமன், இந்திரன் முதலிய தேவர்களை ஆவியாகவும், மற்ற உயிர்களைப் பசுக்களாகவும் கொண்டு, தனது நெற்றிக் கண்ணின் மூலம் அக்கினியை மூட்டி, யாகம் செய்தார் கங்கைச் சடையோனுன சிவபெருமான். அந்த யாகத்தினின்று தோன்றிய வெண்திருநீற்றை அகங்கார மமகாரமாகிய அகப்புறப் பற்றுகள் அழியுமாறு விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் சகலரும் ஆகிய மூவகை ஆன்மாக்களும் சரீரத்தில் தரித்தார்கள் என்பது வரலாருகும்.

விபூதியை மேனியில் அணிவதுடனன்றி மருந்தாகவும் உட்கொள்ளலாம். விபூதியை உட்கொள்வதன் மூலம் வாதம் பித்தம் கபம் முதலிய நோய்கள் நீங்கும். திருநீற்றினல் அபஸ்மாரம், குஷ்டம் முதலிய நோய்கள் ஒரு நொடியில் நீங்கிவிடும் என்று கந்த புராணம் கூறுகிறது.

சங்கர சங்கிதை சுலோகமான ''பஜநாத் ஸர்வபாபக்நம் ஸ்மரணுச் சிவசங்கரம்'' என்பதன் மூலம், விபூதியை உட்கொள்ளுவதால் எல்லாப் பாவங்களும் அழியுமென அறியப்படுகிறது.

தமிழ் வேதத்திலும், ''மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு, சுந்தரமாவது நீறு, துதிக்கப்படுவது நீறு, முத்தி தருவது நீறு, சத்தியமாவது நீறு, தக்கோர் புகழ்வது நீறு, கவினைத் தருவது நீறு, மதியைத் தருவது நீறு, வருத்தம் தணிப்பது நீறு, தத்துவமாவது நீறு, ஏலவுடம்பிடர் தீர்க்கும் இன்பம் தருவது நீறு, கருத இனியது நீறு'' என்று பாலருவாயரும் பாடியருளினர்.

ஆயுள்வேதமும் தன்வந்திரிநூலும் வியாதிகளுக்குப் பரிகாரம் ''மணி மந்திர ஔடதம்'' எனக் கூறின. மணி என்பது ருத்திராட்ச மணியையும், மந்திரம் என்பது திருவைந்தெழுத்தையும், ஔடதம் என்பது விபூதியையும் குறிக்கும்.

சிவபக்தர்கள் விபூதியை மூன்று குறியாக இடுகிறுர்கள். இதில் முதற்குறி சாம வேதத்தையும், இடைக்குறி யசுர் வேதத்தையும், அடியிலுள்ள குறி ரிக் வேதத்தையும் குறிக்கின்றன என்று பிருங்க ஜாபால உபநிஷதம் உரைக்கிறது. மேலும், முக்குறிகளில் முதற்குறி முக்தியையும், இடைக்குறி ஞானத்தையும், அடிக்குறி புத்தியையும் குறிக்கின்றன என வேதங்கள் அறிவிக்கின்றன.

விபூதி என்பது ஐசுவரியம் எனப் பொருள்படுவதால் 'முக்தி' என்பதே தத்துவமாகும். பசுவின் சாணத்தைத் தீயினல் தகித்தே திருநீற்றினைப் பெறுகிருேம். பசு என்பது ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களால் பந்திக்கப்பட்ட ஆன்மாவாகும். அதைச் சிவஞானமாகிய அக்கினியினல் தகித்தலால் உண்டாகும் நீற்றினை அணிபவரே முக்தியடைவர்.

எனவே, திருநீற்றை அணிவதுடன் உட்கொண்டால் உடலில் ஏற்படும் அனைத்துப் பிணிகளிலிருந்தும் விடுதலை கிடைப்பதுடன் பிறவிப் பிணியிலிருந்தும் விடுதலை கிடைக்கும் என்பது தெள்யத் தெளிவு.

— சைவபூஷன சந்திரிகை



# தியான வேளையிலே....

எப். ஜே. அலக்சாண்டர்

தெய்விகத் தன்மை தொனிக்கும் ஒரு குரல் கேட்டது. அது சொன்னதாவது :—

அச்சம் என்பதையே அறியாத ஓர் அன்பு இருக்கிறது ; அது வாழ்க்கையை விடப் பெரியது, மரணத்தைவிடப் பெரியது. நான்தான் அந்த அன்பு! வரம்பு என்பதே அறியாத ஓர் அன்பு இருக்கிறது ; அது எங்கும் வியாபித்திருக்கிறது ; மரணத்தின் முன்னிலையிலும் இருக்கிறது ; பயங்கரத்திலும் தயையே உருவெடுத்ததாக அது விளங்குகிறது. நான்தான் அந்த அன்பு! இன்னதென்று விவரிக்க முடியாத உரை கடந்த இனிமையுடன் கூடிய அன்பு ஒன்று இருக்கிறது ; அது துன்பங்களையெல்லாம் வரவேற்கிறது ; பயத்தையெல்லாம் வரவேற்கிறது ; சோர்வுகளையெல்லாம் விரட்டியடிக்கிறது. நீ எங்கெல்லாம் அதைத் தேடுகிறாயோ அங்கெல்லாம் அது இருக்கிறது. நான்தான் அந்த அன்பு! ஆகா! அந்த அன்பின் பிழிந்தெடுத்த சாரமே நான்தான். என்னவா? அந்த அன்பாகிய நான் உன் ஆத்மாவேயாவேன்! என் சுபாவம் அன்புதான்! நான் அன்பாகவே, அன்பு மயமாகவே இருக்கிறேன்.

ஆகா! எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொள்ளும் பேரழகு ஒன்று இருக்கிறது. அது கோரமோ, அவலட்சணமோ, குறைபாடுகளோ அறியாதது. அது மனம் வாக்கைக் கடந்து பரிசுத்தமாக விளங்குகிறது. அது தெய்வத்தன்மை பொருந்தியது. ஆகா! இந்தச் சௌந்தர்யத்திற்கு ஓர் முடிவே இல்லை! அது ஆகாயம் போல் பரந்திருக்கிறது ; கடல்போல் ஆழ்ந்திருக்கிறது. இனிய நறுமணம் கமழும் வைகறை வேளைகளிலும், செவ்வானம் சூழ்ந்த அஸ்தமன வேளைகளிலும் அது தோன்றுகிறது. புலியின் கர்ஜனையிலும் அப்படியே புள்ளின் கீதத்திலும் அது தோன்றுகிறது. புயலாகவும் அமைதியாகவும் அது காட்சியளிக்கிறது ; ஆனாலும் இவற்றுக்கெல்லாம் அது அப்பால் உள்ளது. இவை அதனுடைய தோற்றமே, காட்சியே, சாயையே ஆகும். அந்தப் பேரழகு, சௌந்தர்யம் நான்தான். சுகத்தைக்காட்டிலும் மிகமிக ஆழ்ந்த, துக்கத்தைவிட மிகவும் ஆழ்ந்த சௌந்தர்யம் ஒன்று இருக்கிறது. இதுதான் ஆத்மாவின் அழகு. அந்த அழகு நான்தான்! ஓ! நான்தான் அந்தப் பேரழகு, சௌந்தர்யம்!

எல்லா ஈர்ப்பு (கவர்ச்சி)களுக்கும், அதன் தன்மை எதுவாக இருந்தாலும் சரி, நான்தான் மையம். நான் காந்தம் ; மற்றப் பொருள்களெல்லாம் இரும்புப் பொடிகளே ; சில இந்தப் பக்கமும் சில அந்தப் பக்கமும் இழுக்கப்படுகின்றன ; ஆனால் எல்லாம் தடுக்க முடியாதபடி இழுக்கவேபடுகின்றன. ஓ! அந்தக் காந்தம் நான்தான்! அந்தப் பேரழகு, சௌந்தர்யம் நான்தான்! அந்த ஆகர்ஷண சக்தி நான்தான். என் சுபாவம் நிரதிசயமான பேரானந்தம் (பரமானந்தம்).

அன்புமயமான வாழ்க்கை ஒன்று இருக்கிறது ; அது பேரானந்தமுள்ளது! அந்த

வாழ்க்கை நான்தான் ! அந்த வாழ்க்கையை எதுவும் எல்லைக்கு உட்படுத்த முடியாது ; அந்த வாழ்க்கைக்கு எதுவும் வரம்பு கட்ட முடியாது. இதுதான் எல்லையற்ற நித்திய வாழ்வு. நான்தான் அந்த வாழ்வு ! அதன் சுபாவம் சாந்தம். நானே அந்தச் சாந்தம் ! எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொள்ளும் அந்தச் சாந்தத்தில் சண்டை சச்சரவுகள் இல்லை ; அமளி, துமளி, அவசரப் போக்குவரத்து முதலிய ஆர்ப் பாட்டங்கள் இல்லை ; தான் மட்டும் வாழ வேண்டும் என்ற கொடிய இரக்கமற்ற முயற்சி இல்லை ; இனவிருத்தி செய்ய வேண்டும் என்ற ஆசையும் இல்லை. அது (சத்) இருக்கிறது ; அது சத்பொருளாக மட்டுமே இருக்கிறது. அந்த வாழ்வு நானே. நட்சத் திரங்களோ சூரியனோ அதைத் தம்முள் அடக்க முடியாது. மற்றோர் ஒளியால் மங்கும்படி செய்துவிட முடியாத பேரொளி அது. அதுவே ஒளிமயமாக இருக்கிறது. இந்த வாழ்க்கையின் ஆழங்களை அளந்து நிர்ணயித்துவிட முடியாது. அதன் உயரங் களை அளவிட முடியாது. நானே அந்த

# பஞ்ச தந்திரம்

பெரியவர்கள் குழந்தைகளை அடிக்கடி கண்காணிப்பது, நடைமுறையில் சாத்தியமில்லாத புத்திமதிகளைக் கூறுவது, அடிப்பது முதலியவற்றைக் கைவிட வேண்டும். இவை குழந்தைகளின் வாழ்வில் அறிவு வளர்ச்சிக்கு முட்டுக் கட்டைகளாக இருக்கின்றன.

ஒருவன் மற்றொருவனுக்குச் செய்யக் கூடிய தருமங்களிலெல்லாம் சிறந்தது ஞானதானமே. பசித்த ஒருவனுக்கு இன்று நாம் உணவு கொடுத்தால், ஆயுள் உள்ள அளவும் அவன் பிழைப்புக்கு அது உதவாது.

ஆனால் அறிவைப் பயன்படுத்தக் கூடிய ஒரு தொழிலை அவனுக்குக் கற்றுக் கொடுத்தால், ஆயுள் உள்ள அளவும் அவன் பிழைப்புக்குத் தேவையானதைப் பெற்றுக் கொள்வான். நிறையக் கிடைத்தாலும் ஆமணக்கு, எருக்கு முதலிய செடிகள், கொருக்கைத் தட்டை ஆகிய வற்றினால் மரச்சாமான்களைச் செய்ய முடியாது. அதே போல, முட்டாள்களை எவ்விதத்திலும் உபயோகிக்க முடியாது.

பிறருடைய விருப்பினாலோ வெறுப்பினாலோ எவனும் உயர்வதும் இல்லை; தாழ்வதும் இல்லை. தனது தகுதிக்கும் நடத்தைக்கும் தக்க மதிப்பையோ அவமதிப்பையோ எவனும் பெறுகிறான்.

கல்லை மலையுச்சிக்குக் கொண்டு போவதோ கடினமான காரியம்; ஆனால் உச்சியிலிருந்து வெகு எளிதில் கல்லைக் கீழே தள்ளிவிடலாம். இதைப்போலத்தான் நல்லதும் தீயதும் ஒருவனிடம் செயல்படுகின்றன.

வாழ்வு. நீயோ என்னுள் இருக்கிறாய், நானும் உன்னுள் இருக்கிறேன்.

ஆதாரமற்றதாகவும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும் நான் இருக்கிறேன்; இருக்கும் எல்லா உருவங்களிலும் நான் ஆத்மாவாக இருக்கிறேன். வாழ்வின் சந்தடிக்குள் நான் நிச்சப்தமாக இருக்கிறேன். காலத்தில் பாவும் ஊடுமாய் நெய்யப்பட்ட எல்லையற்ற (காலம் கடந்த) பொருள் நான். உருவத்திற்கும் எண்ணத்திற்கும் அப்பால் உள்ள சுத்தான்மா நான். எனக்கு மனம் இல்லை; ஆனாலும் எல்லாவற்றையும் உணர்கிறேன் (சர்வக்ஞனாக இருக்கிறேன்). எனக்கு உருவம் இல்லை: ஆனாலும் நான் எங்கும் வியாபித்திருக்கிறேன். ஒன்றையும் என்னுள் அடக்கிக்கொள்ளாமல், எல்லாவற்றிலும் நான் அடங்கி அதாவது நிறைந்து இருக்கிறேன். நானே சர்வசக்தி! நானே பரம சாந்தம்! எல்லையற்ற பொருள் நான்! காலம் கடந்த நித்தியப் பொருள் நானே! நானாவித நாமரூப பேதங்களை ஒன்றுபடுத்தும், ஐக்கியமாக்கும் ஓர் பொருள் நான். உயிருள்ள பொருள்களின் தொகுதியும் சாரமும் நான். போராடிக்கொண்டிருக்கும் பாகங்களுக்குள் (அம்சங்களுக்குள்) நான் முழுமையானவன் (அம்சி)! வாழ்வின் வட்டங்களுக்கு அப்பால், மரணத்தின் வட்டத்திற்கு அப்பால், பிறப்பும் இறப்புமற்று, தளைகளையெல்லாம் கடந்து விளங்குகிறேன். எவன் என்னைக் கண்டுபிடிக்கிறானோ அவனே சுதந்திரன்! அவனே முக்த புருஷன்!

மாயைகளினும் மித்தைகளினும் ஊடே நான் உண்மைப் பொருளை அறிந்துகொள்கிறேன். மாயைகளினும் மித்தைகளினும் ஊடே நான் உண்மைப் பொருளைப் பார்க்கிறேன்; அவ்விதம் பார்க்கப்பட்ட நித்தியமான உண்மைப் பொருள் நானே! இந்த விசித்திர ஜாலத்தை, இந்தச் சக்தியை, உலகமாதாவின் உருவமான இந்த மாயையை இயக்குபவன் நானே! உருவம் உள்ள ஒவ்வொன்றையும் உடலாகக் கொண்டு, காலத்தின் கர்ப்பத்திலிருந்து வெளிவந்து பிறக்கிறேன் (பிறவி எடுக்கிறேன்). காலத்தின் கர்ப்பமும் நானேயாதலால் காலம் கடந்துமிருக்கிறேன். எது என்னுள் உள்ளதோ, எது தத்தாமமோ, 'அது நீயாகிறாய்' ஓ ஆன்மா! ஆகவே எழுந்திரு. விழித்துக்கொள், தளைகளாகிய பந்தங்களையெல்லாம் துண்டம் துண்டமாக வெட்டி எறி. கனவுகளையெல்லாம் அழித்துவிடு. மாயையின் பிடியிலிருந்து விடுபட்டுவிடு. நீ சுத்தான்மா! சுத்தான்மாதான் நீ! உன் ஸ்வரூபத்தை நீ சாட்சாத்கரிப்பதில் ஒன்றும் உன்னைத் தடைசெய்ய முடியாது. எழுந்திரு! எழுந்திரு! லட்சியத்தை அடையும் வரையில நின்றுவிடாதே — சுத்தான்மா, நித்திய வாழ்வு, பேரன்பு, நிரதிசய நித்தியானந்தம், சுதந்திரமாக்கப்பட்ட ஆத்ம சாட்சாத்காரம் — இந்த லட்சியத்தை அடையும் வரையில் நின்றுவிடாதே!

---

## பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்

[எஸ். மீனும்பாள் சீதாபதி]

1. 'ராமா! ராமா!' என்றால் பக்திப் பரவசம் உண்டாகிறது. 'ஹே கிருஷ்ணா!' என்றால் பிரேமைப் பரவசம் உண்டாகிறது. ஆனால், 'ராமகிருஷ்ண குரோ!' என்றாலோ இவை இரண்டும் உண்டாகின்றன.

2 பலவழிகளில் அலையும் மனதை, 'கிருஷ்ணா ராமா என்று கிட' என்று அடக்க முடியவில்லை. ஆனால் குரு ராமகிஷ்ணர் மொழி கேட்டால் மது உண்ட வண்டாய் மனம் மயங்கி நிற்கிறதே! இது என்ன ஆச்சயரிம்!

3. கண் இரண்டு, காது இரண்டு, கை கால்கள் இரண்டு என்று உடலுக்கு இன்றியமையாத உறுப்புக்களைப் போல் மனதிற்கு குரு ராம கிருஷ்ணர் என்ற நாமஸ்மரணம் முற்றும் இன்றியமையாதது.

4. வயிறு பசித்தால் இரண்டு கவளம் சோற்றுக்குப் பறக்கும் மனிதனே! மனம் பசித்தால் ஏன் எங்கெங்கோ அலைகிறாய். இருபெயர் கொண்ட குரு ராமகிருஷ்ணர் இருப்பதை மறந்து!

5. கீழே விழுந்துவிட்ட குழந்தையை ஓடி வந்து இருகரம் கொண்டு அணைக்கும் தாய் போல், அல்லற்படும் மாந்தர்க்கு இரு நாமம் கொண்ட 'குரு ராமகிஷ்ணா!' என்ற ஸ்மரணையே ஆறுதலளிக்கும்.

6. ஆமையும் நத்தையும் ஆபத்து வந்தால் தலையை ஓட்டிற்குள் இழுத்துக் கொள்ளும். அதுபோல், மனிதனே கஷ்டம் வரும்பொழுது, குரு ராமகிருஷ்ண ஸ்மரணை என்ற ஓட்டிற்குள் மறைந்து கொள்ளப் பழகு.

7. மனிதனே! காலை மாலை என்ற இரண்டு பொழுதுகளைத்தான் கடவுள் உனக்குக் கொடுத்திருக்கிறார் என்று எண்ணாதே. அந்த வேளைகளில் இருபெயர் கொண்ட தன் நாமத்தை—'ஹே ராம கிருஷ்ணா! ஹே, ராமகிருஷ்ணா!' என்ற நாமத்தை நீ ஜபிக்கவும் உனக்குக் கொடுத்திருக்கிறான் என்பதை ஒருநாளும் மறந்துவிடாதே.

8. கிருதயுகத்து மக்கள் ராமபிரானையும் துவாபரயுகமக்கள் கண்ண பெருமானையும் மட்டுமே அவதாரபுருஷராகக் காண முடிந்தது. ஆனால் கலியுகத்து மக்களுக்கோ அந்த இரண்டு அவதாரபுருஷர்களையும் சேர்த்தே குரு ராமகிருஷ்ண அவதாரமாகப் பார்க்க முடிந்தது. என்னே நம் பாக்கியம்!




## சுவாமி தயானந்தரின் மறைவு

எண்ணற்ற பக்தர்களின் வழிபாட்டிற்கு உரியவர் ஸ்ரீமத் சுவா மிதயானந்தஜி மகராஜ் அவர்கள். அவர் தமது 88-ஆம் வயதில் 5-6-1980 ஆம் நாள் பிற்பகல் 1 மணிக்குக் கல்கத்தாவில் உள்ள இராம கிருஷ்ண மிஷன் சேவாபிரதிஷ்டான் மருத்துவமனையில் மாரடைப்புக் காரணமாக பூதவுடல் நீத்தார். அன்று காலையில்தான் இதயத்தில் வலி ஏற்பட்டு சேவாபிரதிஷ் டானில் உள்ள (Intensive eare unit of the Seva pratishthan) வார்டில் மருத்துவ உதவிக் காக அனுமதிக்கப்பட்டார். அவரது முடிவு அமைதியும் தெய்விகமும் வாய்ந்ததாக இருந் தது. கடந்த சில மாதங்களாக அவர் உடல் நலமின்றி இருந்து வந்தார்.

ஸ்ரீமத் சுவாமி தயானந்தஜி மகராஜ் அவர்கள், பண்பாடும் தெய்வ பக்தியும் செல்வச் செழிப்பும் நிறைந்த பெரிய ஒரு குடும்பத்தில் பிறந்தவர். இளமைப் பருவத் திலேயே ஆன்மிக வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியத்தை அடைவதற்குத் தேவையான எல்லாவித நற்பண்புகளும் முழு அளவில் அவரிடம் பரிணமித்திருந்தன.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் 9 – ஆவது பொதுத் தலைவராக விளங்கியவர் ஸ்ரீமத் சுவாமி மாத வானந்தஜி மகராஜ் அவர்கள். அவர், சுவாமி தயானந்தரின் சொந்த மூத்த சகோதரரே ஆவார். ஒரே குடும்பத்திலிருந்து வந்த இந்த இரண்டு சகோதரர்களும் பரி பூரணத்துவம் எய்திய ஒப்பற்ற துறவிகளாக விளங்கினர்கள்.

ஸ்ரீமத் சுவாமி தயானந்தஜி மகராஜ் அவர்கள் தமது M.sc. படிப்பு நிறைவுபெற இருந்த சமயத்தில் உலக வாழ்க்கையைத் துறந்து ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தில் சேர்ந்து துறவறம் மேற்கொண்டார்.

1915 - ஆம் ஆண்டு தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியாரிடமிருந்து தயானந்தர் மந்திர தீட்சைப் பெற்ருர். 1921-ஆம் ஆண்டு அவருக்கு ஸ்ரீ மகராஜ் (ஸ்ரீமத் சுவாமி பிரம்மா னந்தஜி மகராஜ்) அவர்களால் சன்னியாச தீட்சை வழங்கப் பெற்றது.

உத்போதனில் இருந்த காலத்தில் தூய அன்னை ஸ்ரீ சாரதா தேவியாருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் பாக்கியம் தயானந்தஜிக்குக் கிட்டியது.

அவர் 1921 – ஆண்டு முதல் 1926 வரை மாயாவதியில் உள்ள அத்வைத ஆச்ரமத்தில் சேவை செய்தார். பின்னர் அமெரிக்காவில் ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள இராம கிருஷ்ண மடத்தின் கிளைக்கு அனுப்பப் பட்டார். அங்கே மடத்தின் தலைவராக 1929 - ஆம் ஆண்டு ஏப்ரல் முதற்கொண்டு 1931 ஆகஸ்ட் வரை தொண்டு புரிந்தார்.

அமெரிக்காவில் இருந்தபோது தாய்மார் களுக்கும் குழந்தைகளுக்கும் தேவையான எல்லாவித மருத்துவ வசதிகளுடன் கூடிய

பலவேறு மருத்துவ நிலையங்களை சுவாமி தயானந்தர் நேரில் கண்டார். அது காரணமாக அவருக்கு, மேலைநாடுகளில் கிடைப்பதைப் போன்ற உயர்தர மருத்துவ வசதிகளை நமது நாட்டு ஏழைத் தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்ற ஆர்வம் தோன்றியது. அதே நோக்கத்துடன் அவர் 1932 – ஆம் ஆண்டு தாயகம் திரும்பினர். வரும் வழியில் அவர் ரஷ்யா முதலான மற்ற ஐரோப்பிய நாடுளுக்கும் சென்று அங்கெல்லாம் தாய்மார்களுக்காகவும் குழந்தைகளுக்காகவும் இயங்கி வரும் மருத்துவ நிறுவனங்களின் பணிகளைக் கூர்ந்து ஆராய்ந்தார்.

1932 – ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் சிசுமங்கல் பிரதிஷ்டான் (பிரசவ விடுதி & குழந்தைகள் பராமரிப்பு நிலையம்)' என்ற பெயரில் ஒரு மருத்துவமனையை கல்கத்தாவில் ஒரு வாடகைக் கட்டிடத்தில் சுவாமி தயானந்தஜி துவக்கினர். அதுவே பல்கிப் பெருகி மாபெரும் ஆலமரம் போன்று நாளடைவில் தனக்கு உரிய சொந்த இடத்தில் 'ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் சேவா பிரதிஷ்டான்' என்ற பிரம்மாண்டமான மருத்துவ நிலையமாக மாறி பொதுமக்களுக்குத் தொண்டு புரிந்து வருகிறது. இந்தியாவின் பல பாகங்களிலும் மருத்துவமனைகள் தோன்றுவதற்கு முன்னேடியாக இருந்த பெருமை சேவாபிரதிஷ்டானுக்கு உண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்ருல் நடத்தப் பெற்று வரும் மருத்துவமனைகளில் அளவிலும் தரத்திலும் முதலாவது இடத்தை வகிப்பது சேவாபிரதிஷ்டானே ஆகும்.

1963 – ஆண்டு வரை சேவாபிரதிஷ்டானின் காரியதரிசியாகவும், பிறகு கடைசி வரையில் அதன் மானேஜிங் கமிட்டியின் உப தலைவராகவும் சுவாமி தயானந்தஜி இருந்து வந்தார்.

தவிர ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் டிரஸ்டிகளில் ஒருவராகவும், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் செயற்குழு அங்கத்தினராகவும் அவர் 1947 – ஆம் ஆண்டு மார்ச் மாதம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சுவாமி தயானந்தரின் வாழ்க்கை ரிஷிகளின் பாரம்பரியத்தில் வந்தவர் அவர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு என்பதில் ஐயமில்லை. அவரது ஒப்பற்ற தெய்விக இயல்புகளால் மக்கள் தங்களை அறியாமலே இயல்பாக அவரைப் பூஜித்தற்கு உரிய மகான் என்ற ஸ்தானத்தில் வைத்துப் போற்றி வந்தனர்; அவரைக் கண்ணல் பார்ப்பதே ஒரு மாபெரும் புண்ணிய செயல், ஆத்மசாதனம் என்று மக்கள் கருதி வந்தனர்.

கல்கத்தாவில் உள்ள சேவாபிரதிஷ்டான் மருத்துவ நிலையம் சுவாமி தயானந்தருக்குப் பொருத்தமான நினைவாலயமாக என்றென்றும் திகழும் என்பதில் ஐயமில்லை.

'ஆத்மனே மோட்சார்த்தம் ஜகத் ஹிதாய ச – தனது முக்திக்காவும் உலக நன்மைக்காகவும் ஒரு துறவியின் வாழ்க்கை அமைய வேண்டும்' என்ற கோட்பாட்டிற்கு சுவாமி தயானந்தரின் தெய்விகமயமான வாழ்க்கை முழு அளவில் பொருத்தமாக அமைந்திருந்தது.

பொதுவாக நாம் ஒருவர் காலமாகும் போது அவரது ஆன்மா சாந்தியடையப் பிரார்த்திப்பது வழக்கம். சுவாமி தயானந்தரின் விஷயத்திலோ அவரது ஆன்மா சாந்தியடையும் என்பதில் ஐயமோ, அவ்விதம் நாம் பிரார்த்திக்க வேண்டிய அவசியமோ இல்லை. மாருக, துறவு மனப்பான்மையும் தொண்டு மனப்பான்மையும் நம்மிடம் வளர்ந்தோங்க ஸ்தூல உடலை உகுத்து விட்ட நிலையிலும் நம்மை ஆசீர்வதித்தருளும்படி அவரை நாம் பிரார்த்திப்போமாக.






# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1980 ஆகஸ்ட் & செப்டம்பர் மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணனந்தர் ஜயந்தி விழா :

8—8—80 வெள்ளிக்கிழமை ஜன்மதிதி : விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன (காலை 8 மணி முதல் 11 மணி வரை)

8—8—80-ஆம் நாள் மாலை வழிபாட்டிற்குப் பிறகு 'சுவாமி ராமகிருஷ்ணனந்தரின் வாழ்வு—வாக்கு' பற்றி மடத்தைச் சேர்ந்த துறவியர் உரை நிகழ்த்துவார்கள்.

10—8—80 ஞாயிறு சுவாமி ராமகிருஷ்ணனந்தர் ஜயந்தி பொதுக் கூட்டம் மாலை 5-30 முதல் 7 மணி வரை

ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி :

1—9—80 திங்கட்கிழமை : கோகுலாஷ்டமி — விசேஷ பூஜை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

7—9—80 ஞாயிறு : ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி பொதுக்கூட்டம் (மாலை 5-30 மணிக்கு)

சத்சங்கம் : ஞாயிறு தோறும் (மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை)

ஸ்ரீலலிதா ஸகஸ்ரநாம பாராயணம் (3, 17, 31—8—80 & 14, 28—9—80)

ஸ்ரீவிஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம் (10, 24—8—80 & 7, 21—9—80)

1. ஸ்ரீமத் பாகவதம் — திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (19—8—80 & 14—9—80)
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் — திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (24—8—80 & 21—9—80)
3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் — திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (31—8—80 & 28—9—80)

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்ற தலைப்பில் 10—8—80 & 7—9—80 ஆகிய இரண்டு நாட்களைத் தவிர ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களிலுள்ள ஏனைய எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் — சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — பக்தியோகம் — சுவாமி கபீரானந்தர்
3. புதன் — தைத்திரீய உபநிஷதம் — சுவாமி அமலாத்மானந்தர்
4. வியாழன் — விவேக சூடாமணி — திரு 'அண்ணு' சுப்ரமண்யம்
5. வெள்ளி — ஆன்மிக வாழ்க்கை — சுவாமி கமலாத்மானந்தர்
6. சனிக்கிழமை (2—8—80 & 20—9—80 மட்டும்) அத்யாத்ம ராமாயணம் — ஜஸ்டிஸ் பி. ராமகிருஷ்ணன், ஐ. சி. எஸ். ரிடையர்டு)
7. சனிக்கிழமை (9—8—80 & 27—9—80 மட்டும்) ஸ்ரீஆஞ்சனேயர் — ஆர். கோதண்டராமன்
8. சனிக்கிழமை (16—8—80 & 6—9—80 மட்டும்) வால்மீகி ராமாயணம் — டாக்டர் என். விழிநாதன்

வேறு சில நிகழ்ச்சிகள் :

| | | |
|---|---|---|
| 24—8—80 | ஞாயிறு | : ஓணம் |
| 13—9—80 | சனி | : விநாயக சதுர்த்தி |
| 26—8—80 | செவ்வாய் | : சுவாமி நிரஞ்ஜனனந்த ஜயந்தி |
| 8—9—80 | திங்கள் | : சுவாமி அத்வைதானந்த ஜயந்தி |

6, 22—8—80 & 5, 20—9—80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

ஒவ்வொரு மாதத்தின் இரண்டாவது ஞாயிற்றுக் கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்.

வெள்ளிக்கிழமை தோறும் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம் : 18, 9-ஆவது லேன், சாஸ்திரி நகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை—600 004





ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.
அச்சிடுபவர்: K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை 600 020